# ராம்ப்ருக்ஷ பேனிபுரி

தமிழாக்கம்
*டி. எஸ். ரங்கநாதன்*

சாஹித்ய அகாதெமிக்காக

**கலைமகள் காரியாலயம், சென்னை-1.**

**Mann Uruvangal** (pen portraits of rural India). Tamil translation of Rambriksh Benipuri's **Mati ki Muraten** by V. S. Ranganathan. Sahitya Akademi, New Delhi, *1960*
Price: Rs. *2·50*.





முதல் பதிப்பு, 1960.

வெளியிடுபவர் :

**கலைமகள் காரியாலயம்**

சென்னை-4.

அச்சிட்டவர் :

**சென்னை லா ஜர்னல் பிரஸ்,**

**(பிரைவேட் லிமிடெட்)**

**சென்னை-4.**

விலை: ரூ. 2·50

# பேனிபுரி

பேனிபுரி - இப்பெயர் பல பொருள்களைக் குறிப்பிடுவது. ஒரு பேனிபுரி, சிறுவர் இலக்கியங்களை ஆக்கினார். மற்றொரு பேனிபுரி நேர்மை, உரன், தியாகம், உழைப்பு, சமூக அரசியல் புரட்சிகள் ஆகியவற்றில் வாலிபர்களுக்கு முன்மாதிரியாக இருந்தார். வேறொரு பேனிபுரி பொதுவுடைமைக் குழுவை நிறுவியவர்.

இந்தப் பேனிபுரி எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின் வெளிப்பட்டபோகும் இவ்வகையான பல எண்ணங்களுக்கும் இயக்கங்களுக்கும் தம் இலக்கியங்களில் முன் குறிப்புத் தந்திருக்கிறார். ஒரு பேனிபுரி சுவைமிக்க நாடக ஆசிரியர், ஓர் அற்புதச் சொற்சிற்பி, பாரதம் முழுவதும் இன்று, அவருடைய குணசித்திரங்களைப்பற்றியே பேசுகிறது எல்லாவற்றையும் சோத்துப் பார்த்தாலோ எல்லாப் பேனிபுரிகளும் ஒரே பேனிபுரியின் வெவ்வேறு தோற்றங்கள். ஆனால் எல்லோரும் மனத்தைக் கவர்பவர், எல்லோரும் மாண்புமிக்கோர்.

பேனிபுரி தமது ஒரு புத்தகத்தின் படைப்பில் 'எவருடைய மணிக்கட்டில் மூளையும் விரல்களில் கணகளும் இருக்குமோ?' என்று கூறியிருக்கிறார். மொழியும் எண்ணங்களும் பேனிபுரியின் தொழிற்கூடத்தின் வழியாக வெளிப்படுகையில் இவ்வாறே உயிர் பெற்று விளங்குகின்றன. இது இலக்கியத்தின் உரைகல். இது சொற்களைப் பேசச் செய்கிறது.

கனவுகள் உயிர் பெற்று நனவாகி உலவுமிடங்களிலும், கருத்துக்கள் அம்புகளைப்போல் மனத்தில் பதியும் இடங்களிலும் மலர்களின் புதுமையும், பனித்துளியின் எழிலும் முன்னைவிட மிகுதியாகும் இடங்களிலும், இயற்கையின் சித்திரிப்புகள் உயிர்த்துடிப்பில் மூலத்தை

விஞ்சும இடங்களிலும் பேணிபுரியின் எழுதுகோலிலிருந்து பெருகும் மொழித்திறனைக் காணலாம்.

ஸ்ரீ ராம்ப்ருக்ஷ பேணிபுரி பீகார்வாசி. அவர் தம் வாழ்வில் பல பத்திரிகைகளைத் தொடங்கினார். அவற்றில் சில இன்னும் நடந்துவருகின்றன. சில நம் நாட்டில் நடந்து வருவதுபோல் நின்றுபோய்விட்டன. அவர் முதலில் குழந்தை இலக்கியங்கள் எழுதி நல்ல பெயர் பெற்றார். பிறகு வாழ்க்கை வரலாறுகளையும், அரசியல் நூல்களையும் எழுதினார். பின்பு நாடக ஆசிரியராகவும் ஆனார். அத்துறையில அவருக்குச சிறிது வெற்றியும் கிட்டியுள்ளது. ஆனால் ஹிந்தியில தமக்கென ஒரு தனி நடையை வகுத்துக்கொண்ட எழுத்தாளர்களில் தலைசிறந் தவராக அவர் எண்ணப்படுகிறார். அவருடைய நடையின் அற்புதமான மாதிரி, மண உருவங்களில், எலலாவற்றையும்விட நன்கு காணப்படுகிறது. இந்நூல பாரதத்தின் முக்கியமான மொழிகள் அனைத்திலும் மொழி பெயர்க்கப்படுகிறது என்பது மகிழ்ச்சிக்கு உரிய செய்தி. இதற்காக நாம் சாகித்திய அகாதெமியைப் பாராட்டுகிறோம்.

ராமதாரீஸிம்மதினகர்

# இந்த மண் உருவங்கள்

நீங்கள் எப்பொழுதேனும் கிராமத்தின் பக்கம் சென்றிருந்தால் ஓர் ஆலமரம் அல்லது அரசமரத்தின் கீழே ஒரு மேடைமீது சில உருவங்கள் - மண் பொம்மைகள் வைத்திருப்பதைக் கண்டிருப்பீர்கள்.

இந்தப் பொம்மைகளுக்கு ஓர் அழகும் இல்லை, வண்ணமும் இல்லை ரோமாபுரிப் பொம்மைகளை விரும்பி மகிழ்பவர் இவற்றில் மகிழ்வதற்குரிய எதையுங் காணாமல், பார்த்த அளவிலே முகத்தைத் திருப்பிக்கொண்டால் ஆச்சரியம் ஏதும் இல்லை

ஆனால் இந்த அழகற்ற, கரடுமுரடான பொம்மைகளிலும் ஓர் உள்ளுறை உண்டு. நாம் அதைக் கவனித்ததில்லை, நினைத்ததில்லை. இதுதான் வாழ்க்கை! இவை மண்ணால் ஆனவை; மண்ணிலே நிலைபெற்றவை, அதனால் வாழ்க்கைக்கு மிக அருகிலே உள்ளன. இவற்றிலே வாழ்க்கை ததும்புகிறது இவை காண்கின்றன, கேட்கின்றன, மகிழ்கின்றன, சினங் கொள்ளுகின்றன, சாபம் இடுகின்றன, வாழ்த்துகின்றன.

இவை வானத்துத் தேவர்களுடைய உருவங்களோ அவதார புருஷர்களுடைய திருவுருவங்களோ அல்ல. கிராமத்திலுள்ள சாதாரணமான உருவங்களே, மண் பொம்மைகளே. ஏதோ எதிர்பாராத உலகியலை மிஞ்சிய செயல் காரணமாக ஒரு நாள் தெய்வத்தன்மையை அடைந்தன தேவர்களைச் சார்ந்தனவாக எண்ணப்பட்டன. கிராமத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் இன்ப துன்பங்களை உண்டுபண்ணுவனவாகவும், அவற்றைக் காண்பனவாகவும் ஆகிவிட்டன

இவை அந்த மண்பொம்மைகளின் உருவங்கள்! ஆம், இவைகள் பார்க்கின்றன, கேட்கின்றன, மகிழ்கின்றன, சினங் கொள்கின்றன மகிழ்ந்தால் பயிர்கள் நல்ல பயன் அளிக்கும், யாத்திரையில் இன்பம் கிடைக்கும், வழக்கில் வெற்றி கிட்டும். சினங் கொண்டால் மக்கள் நோயில் வீழ்வார், வைசூரி காணும், பயிர்களில் பூச்சி அடிக்கும், வீடு தீக்கு இரையாகும்.

இவை வாழக்கையின சார்பிலே இருக்கவில்லை; வாழ்விலேயே இரண்டறக கலந்துள்ளன. இதனால் வாழ்வைப போற்றும ஒவ்வொருவனுடைய சிரமும இவற்றின் அருகே தானகவே தாழகின்றது. புத்தருடைய சிலைகள் கிரீக-ரோமன சிலைகள - பாராககத் தகுந்தன, வணங்கத் தகுந்தன என்றால் இந்த மண்ணுருவங்களும புறககணிககத தகுந்தன வல்ல; உங்களிடததில நாம் விண்ணப்பித்துக்கொள்ள வேண்டியது இதுதான.

*     *     *

நீங்கள ராஜாராணி கதைகள் படித்திருப்பீர்களே, முனிவர்களின கதைகளையும கேட்டிருப்பீர்கள, சரித்திர புருஷர்கள், தலைவர்கள இவர்களின வாழ்க்கை வரலாற்றையும் தெரிந்துகொண்டிருப்பீர்கள். அந்தக் கதைகள, அவ்வாழ்க்கைகள், அவ்வரலாறுகள, எத்தனை இன்பம பயப்பன, ஒளி வீசுவன, உற்சாகமளிப்பன! அவற்றை நாடோறும நாம படிக்கத்தான வேண்டும், சிந்திகக வேண்டும், உட்கொள்ளவும் வேண்டும.

ஆனால் உங்கள கிராமங்களிலும் அத்தகைய மனிதர் சிலர் உள்ளனர் என்பதையும, அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும் கதைகளும, ராஜாராணி, முனிவர்கள சரித்திர புருஷர்கள, தலைவர்கள இவர்களுடைய கதைகளைக் காட்டிலும, வாழ்க்கை வரலாறுகளைக காட்டிலும எந்த வகையிலும குறைந்தவை அல்ல என்பதையும நீங்கள் எப்பொழுதாவது நினைத்துப பார்த்ததுண்டா? ஆனால் சகுந்தலை, வசிஷ்டர், சிவாஜி, நேதாஜி என்று இவர்களிடத்திலேயே உயிரை விட்டுக்கொண்டிருக்கும நமக்கு நம கிராமத்துப் 'பாலகோவிந்தன்', 'பலதேவஸிம்மன்', 'தேவன்' இவர்களைக கவனிப்பதற்குப் பொழுது எங்கே இருக்கிறது?

ஹாஜாரீபாக் மத்திய சிறையில் நான் தனிமை வாழ்வு வாழ்ந்துகொண்டிருந்தேன; அப்போது எங்கள ஊரிலும எங்கள பாட்டனார் ஊரிலும் உள்ள இத்தகைய மனிதர்கள் சிலரின உருவங்கள் என கண்ணெதிரே வந்து ஆடின, என் எழுதுகோலினால் தங்கள உருவைச் சித்திரிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டன அந்த வேண்டுகோளில் ஓர் உறுதி யிருந்தது. அந்த வேண்டுகோளின் விளைவாகவே இந்த மண் உருவங்கள் அமைந்

தன. ஆம், சிறையில இருநததனுல் பைஜமாமாவும் இவவரிசையில் சேர்நதாா. தம் உருவத்தை எனனைக் கொண்டு கோலம செய்துகொணடாா.

நான் தெளிவாகக் கூறுகிறேன, இவைகள கதைகள் அல்ல, உண்மையான வாழ்க்கைகள. நடமாடும மனிதா களின் சொல்லோவியஙகள். கலைத்திறமை அவைகளை உருவாக்கியுளளது என்பதை ஒபபுக்கொளளுகிறேன. ஆனல் வணணப பூசசினல் மூல உருவததில உள்ள கோடுகள மறையுமாறு நான செய்துவிடவில்லை. கறிககு இயற்கையாக உளள சுவை கெடுமாறு தாளிதம் செய்யும சமையற்காரனை நலல சமையற்காரனுக நான கருத மாட்டேன. கலையின வேலை, வாழ்கையை மறைபப தல்ல, அதை வெளிப்படுத்துவதே; எதை அடைவதால வாழக்கை வளம பெறுமோ ஒளி பெறுமோ அதுவே கலை.

பொனனையும வெளளியையும மதிக்கும இக காலததில் இநத மண உருவஙகள என்ன ஆதரவைப பெறப போகினறன என்று அஞ்சினேன. ஆனல் அணி மையில் வெளிவந்த சிலவற்றை ஹிநதி உலகம் நன்கு போற்றி ஏற்றுககொண்டதைக் கணடேன். இது என் எழுதுகோலின கலைத்திறன் அனறு; மனிதாகளின உள் ளததில் தாம பிறநத மண்ணின்பால் இயல்பாக உளள அனபே இதறகுக் காரணம். அவவனபைப் பனமுறை வணஙகுகிறேன; இனனும இவ்வகையான சில மண் உருவங்களை ஹிநதி உலகினமுன கொண்டு வரும பேறு கிட்ட வேண்டுமெனறு ஆசை கொள்ளுகிறேன.

ஹிமாலயா, படனு,<br>1948

—ஸ்ரீ ராம்ப்ருக்ஷ பேனிபுரி

# பொருளடக்கம்

## ரஜியா

காதில வெளளி வளையம, கழுததில வெளளிச சஙகிலி, கையில வெள்ளிக் காபபு, காலில வெளளிக கொலுசு, மணிக்கட்டுவரை நீணட, கொடிபோலப் பினனல் வேலை செயயப்பபடட ரவிககை - இவறறுடன கறுப்புப் புடைவையின நுனியைக் சமுத்தில் சுற்றிக கொணடு, சிவந்த முகததினமீது வந்து விழும கூநதலை விலககிவிடுவதில கருத்தைச் செலுததியவளாக அச சிறுமி அனறு என எதிரே வநது நினருள். அப்பொழுது இளமபருவத்தில நான் பாாத்திருநத அநத ரஜியாவின் நினைவு என மனததே கிளாநதெழுநதது. நான சறறும் எதிர்பாராமல அக கிராமததிறகுள நுழைநதேன்.

ஆம, அது என இளமபருவதது நிகழசசி. கசாப்புக கடையிலிருந்து கயிறறை அறுததுககொண்டு ஓடி வரும ஆடடைபபோல் அபபொழுதுதான் பளளியிலிருநது ஓடிவநதேன வநததும திணணையினமீது என புததகப் பையை வீசி எறிந்தேன் சிததி, ஷஷ்டி விரதத்திறகாகச செய்து வைததிருந்த பலகாரததைக கையில் எடுததுககொணடு அதைச் சுவைததுச் சுவைத்துச சாப்பிட்டுக்கொண்டே நெல குறறும் ஏறறததினமேல் ஏறினேன. அதில் ஊஞசலாடும இனபததை அநுபவிகக விரும்புகையில், ''அடே, பெரியோா உணணும பொருளைத தொட்டுவிடாதே'' என்று ஒரு குரல் கேடடது. அநதக குரல் வநத திசையை நோககுமபோது அநதப் புதுவகையான உருவத் தோற்றமுளள அச சிறுமி என எதிரே இரணடு மூனறு கஜ தூரததில் நினறிருந்தாள்.

என்னைப பொறுததவரையில இநத உருவம புது வகையாகவே தோனறியது. நான வசிககும பேடடை முறறும ஹிநதுககள நிரமபியது. என்னை எநதக கூட்டத் திறகும விழாவிறகும செலல அநுமதிப்பதிலலை. ஏனெனில சிறு வயதில நான ஒரு விழாக கூடடததில் காணாமற போயவிடடேனும். என்னை எவனே ஓர அகோர மதத்தைச சேர்நதவன தூககிச் சென்றன அத தருணததில ஒரு கிராமத்துப பெண என்னைக கண்ட தால எனககு விடுதலை கிடைத்தது. நான என தாய் தநதையருககு ஒரே மகன. அம்மா இறநதுவிட்டாள. அதனல அவளுடைய ஒரே குழநதையான என்னைச் சிறறமமை, கணணின கருவிழியாகப பாதுகாதது வந்தாள.

எஙகள ஊரிலும் சிறுமிகளுககுக குறைவிலலை. ஆனல அவர்களுககு இததகைய ஆடை அணி களோ, உருவத தோறறமோ, நிறமோ இருககவிலலை. என் கிராமததுப் பெணகள காதுகளில பாலி* அணிவதே இல்லை. மணிக்கட்டுவரை ரவிக்கை அணிவதையும நான் ஒரு பொழுதும கண்டதிலலை. சிவநத நிறமுளள முகஙகளைக் காணலாம ஆனல இவளுடைய கணகளில காணும அநத அறபுதமான நீல நிறம அஙகெலலாம ஏது? மேலும முகததின் அமைபபு முழுதுமே நிசசயமாக ஒரு தனிச சிறப்புப் பெறறது. அதனல்தான நான அதைக கூர்ந்து நோககலானேன்.

இச் சிறுமி, ரஜியாவைத் தன தாயெனறு கூறினள. பல முறைகள் வளையற் பெட்டியைத் தூககிக்கொண்டு எங்கள ஊருககு வருகையில் அவளைப் பார்த்திருக கிறேன். அவள் என வீட்டுக் கூடத்தில் வளையல் கடை யைப் பரப்பிககொண்டு உட்கார்ந்திருந்தாள். எத்

---

* பாலி - வடநாட்டுப் பெணகள காதில அணியும வளை யம போனற ஓர அணி.

தனேயோ பெணகளும் நாட்டுப பெணகளும அவளேச சூழந்துகொண டிருநதனா. வாயால விலே கூறிக கொணடும, கையால வாஙகுவோரின கைகளில வளேகளே அணிவிததுககொணடும தன வியாபாரத்தைச் செய்து கொணடிருந்தாள. இதுவரை அவள தனியாக வருவ தையே நான கணடிருககிறேன. சிறசில வேளேகளில அவளுககுப பினனுல ஆடவன ஒருவன வளேயற பெட்டி யைச சுமநது வருவதையும் பாாததிருககிறேன். இநதப் பெண இனறுதான் முதல் முறையாக வந்திருந்தாள. குழநதைப பருவததிறகுரிய எநத உள்ளக கிளாசசி அவளே என பககமாக ஈர்ததது என்பதை அறியேன. மறறொருவா அருகே வநதாலே ஒருவா கையிலிருககும் உணவு நீடடுப்படடுவிடும எனபதை அவள் ஒரு வேளே அறியாள போலும. என அனனே திடீரெனறு கூசச விடடாள சிறுமி திடுககிட்டாள, துயருற்ருள. அவள் காலகள எனனவோ அஙகேயே பதிந்துவிட்டன. ஆனல் இபபடித திடுக்கிடடதனலேயே அவள் எனககு மிக அருகே வந்துவிடடாள எனறு சொலலவேண்டும். இதில ஐயமே இலலே

என சிற்றனனே சட்டென்று எழுந்து உள்ளே சென்று இரணடு பூரிகளேயும, கோதுமையால் செய்த ஒரு பணியாரததையும கொணடுவந்து வைக்கததான் வைததாள். ஆனல அவள் அவற்றை வாயில் போட்டுக் கொளளவிலலே நான, ''சாப்பிட மாட்டாயா? உன் வீடடில இவைகளெலலாம் செய்வதில்லேயா? ஷஷ்டி விரதம இருப்பதில்லேயா?'' என்று கேட்டேன. எததனே கேள்விகள் கேட்டேன! எல்லாவறறிறகும் ஒரே விடை தான வந்தது; இல்லே எனற விடை. அதையும வாயால் சொல்லவில்லே. தலேயை ஆட்டித் தெரிவித் தாள. அப்படித தலேயை அசைக்கையில் நெறறியின் மீது சுருள சுருளாகப் படியும் கூந்தல் அவளது வெட்கத் தைச சிறிது மறைத்தது.

அவள தாய், வளைகள வாஙகும வேறு பெணகளைத் தேடிக்கொண்டு எஙகள வீடடுக கூடததை விடடுச் செலலுகையில ரஜியாவும அவள பினனுலேயே சென ருள. அவள சென்ற பிறகும அவள என அருகே இருபப தாகவே எனககுத தோனறியது. அவள கயிறறில கட்டி எனனைத தனனுடன சிறிது தூரம இழுததுச சென்றதுபோல ஓா உணாசசி உணடாயிறறு ஒரு வேளை என உணாசசிப் பெருககை நோககிததான வளையலகாரிகளுககே இயலபான இடையருத நகைப்பும மகிழசசியும் முகததில தவழ அவளுடைய அனனை, ''மாப பிளளை, ரஜியாவை மணநதுகொளளுகிருயா?'' என்று கேடடாளபோலும பிறகு மகள பககந திருமபிப பேசினுள புன சிரிபபுடன, ''என்ன ரஜியா, இநத மாபபிளளையை உனககுப பிடிககிறதா?'' என்ருள அவள இதைக கூறியதும நான ஓடிவிடடேன ஒரு முஸலிம பெணணையா மணபபது' ரஜியாவினதாய ரஜியா வைத் தடடிக கொடுததுககொண டிருநதாள. ரஜியா அவள காலகளைக சடடிககொண டிருநதாள சிறிது தொலைவு சென்ற பிறகு நான திருமபிப பாாத்தேன

* * *

ரஜியா, வளையலகாரி' அவள இநதக கிராமததில வசிப்பவள்: குழநதைப் பருவததிலும இளமையிலும இவ்வூரிலேயேதான இருககிருள். ஏனெனில் முஸலிம களுக்கு அவர்கள் ஊரிலேயே மணமாகிவிடுகிற தலலவா? இது ஒரு நன்மைககே, பல நாடகள்வரை அவளை எங்கள் ஊரிலேயே சந்திதது வநதேன்

நான் படித்துப் பெரியவனுனேன். பெரியவனுன தும மேலே படிப்பதறகாக நகரத்திற்குப் போக வேண்டி யிருநதது விடுமுறை நாட்களில் எப்பொழுதாவது வருவேன. இஙகே ரஜியாவுக்குப் படிக்கும பாககியம இல்லை. ஆனுலும் வளாசசியில எனக்குப பின தங்கி விடவில்லை. சில நாடகளவரை தன அனனையின

பின்னே சுற்றித் திரிந்துகொண்டிருந்தாள். இப்பொழுது அவள் தலையில் வளையற் பெட்டி ஏறவில்லை. ஆனால் பெண்களின் கைகளில் வளைகளை அணிவிக்கும் கலையை நன்கு அறிந்து அதில் தேர்ந்துவிட்டாள். அவள் கைகள் மிக மிருதுவானவை. புது நாட்டுப் பெண்களின் கருத்து இது. அவர்கள் இவளுடைய கைகளால் வளைகள் அணிந்துகொள்வதை விரும்பினர். இதனால் அவள் அன்னைக்கு மகிழ்ச்சிதான். ரஜியா வளை போட்டுக்கொண்டிருப்பாள், அவள் தாயோ புது வாடிக்கைக்காரர்களைப் பிடிப்பாள்.

ரஜியா வளர்ச்சி பெற்று வந்தாள். நான் அவளைச் சந்திக்கும்பொழுதெல்லாம் அவளுடைய உடலில் புது வனப்பு மிகுந்துகொண்டே வந்ததைக் கவனித்தேன். உடலிலும் இயலபிலுங்கூட அவள் வளர்ந்தாள். முதல் சந்திப்பிற்குப் பிறகு அவள் மங்கைப் பருவத்தை அடைந்திருக்கிறாள் என்பதை அறிந்தேன். என்னைக் கண்டதும் அருகே ஓடி வருவாள். கேள்விமேல் கேள்வியாக அடுக்குவாள். அவை புதுமையும் வேடிக்கையுமான கேள்விகள்: "இந்தப் புதுப் பாலிகளைப் பாருங்கள். இவை உங்களுக்குப் பிடிக்கின்றனவா? நகரங்களில் இத்தகைய பாலிகளை அணிந்துகொள்ளுகிறார்களா? எங்கள் அம்மா பட்டணத்திலிருந்து வளையல்கள் வாங்கி வருகிறாள். இம்முறை என்னையும் அழைத்துச் செல்லும்படி நான் சொல்லியிருக்கிறேன். தாங்கள் அங்கே எப்படியிருக்கிறீர்கள்? அங்கே வந்தால் தங்கள் தரிசனம் கிடைக்குமா?" - இப்படி அவள் ஏதேதோ உளறிக்கொண்டே இருப்பாள், நான் கேட்டுக்கொண்டே இருப்பேன். ஒருவேளை பதிலே அவசியம் இல்லைபோலும்!

சில நாட்களுக்குப் பிறகு அவள் கொஞ்சம் வெட்கப்படுகிறாள் என்று அறிந்தேன். என் அருகே வருவதற்கு முன் இங்கும் அங்கும் பார்ப்பாள். எவரும் காணாமல் கேளாமல் பேசுவாள். ஒரு நாள் அவள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் என் அண்ணி, "இங்கே பார்

ரஜியா, தமபியை உன் வலையில சிக்கவைத்து விடாதே''
என்ருள். ரஜியா என அண்ணியின் பககம் திருமபிச்
சிரிக்கத்தான சிரித்தாள ஆனுல அவளுடைய கன்னங்
கள் இரணடும சிவநதுவிட்டதைக கணடேன. அவ
ளுடைய நீலக கடைவிழிகளில நீர் தேஙகி நினறது
போலவும் தோனறியது. நாஙகள எஙகேயாவது சநதிக
குமபோதெலலாம பல கணகள ஈட்டி முனைபோல எங்க
ளைத் துளைககினறன எனபதைக கவனிததேன.

ரஜியா வளர்நதுகொணடே இருநதாள. பேதைப
பருவம மாறிப பெதுமபைப பருவம அடைந்தாள இப
பொழுது மங்கைப் பருவம அவள உடலில மலரத்
தொடங்கியிருந்தது. இப்பொழுதுகூட அவள தன
அன்னையுடனேயே வருவாள. ஆனுல முனனெலலாம
தன தாயின நிழலபோல இருநதாள இப்பொழுதோ
அவளுககெனத தனிபபட்ட ஒரு நிலை வநதிருநதது.
எததனையோ இதயங்கள அவள நிழல ஆவதறகுத துடித
துககொண டிருநதன. தஙகள சகோதரிகளுககு அவள
வளை போடுமபொழுது எத்தனையோ ஆடவர்கள
வேடிககை பாாப்பதறகு அங்கே கூடிவிடுகினறனா
ஏன்? அவாகளை அஙகே இழுதது வருவது சகோதரிக
ளிடததுள்ள பாசமா அலலது ரஜியாவினிடததில தமமை
அறியாமலேயே உணடான கவாச்சியா? மனைவிகளின
கையில அவள வளைபோடுமபோது அவாகள கணவன
மாா தொலைவிலே நினறு ஓரககணணுல பாாததுக
கொணடே இருபபாாகள தம புது மனைவிகளின மெல்
லிய மணிககட்டுகளையா, அலலது அவறறினமீது நடம
புரியும ரஜியாவின மெல்லிய விரலகளையா அவாகள்
பார்பபது? எவற்றைப் பாாககினருாகளோ நாம அறி
யோம. ரஜியாவுககே இதில ஒரு சுவை இருக்குமபோல்
இருககிறது. கணவனமாாகளைப் பரிகாசம் செயவதி
லும அவள இளைததவள அலல. ''ஐயா இவை மிக மெல
லிய வளைகள, உடைநதுவிடப் போகினறன. கொஞசம
கவனித்துக்கொள்ளுஙகள்!'' எனபாள். கணவனமார்

ஓடுவார்கள். பெண்கள உரக்க நகைபபார்கள. ரஜியா இப்பொழுது தன தொழிலில நனகு தேர்ந்து வநதாள.

ஆம, ரஜியா தன் தொழிலில நனகு தோசசி அடைநது வநதாள. வளையறகாரியின தொழிலுககு, அவளிடததில பல வணணமுடைய வளையலகள இருந்தால மட்டும போதாது. மலிவாகவும உறுதியானவையாகவும புதுபபுது மாதிரிகளாகவும இருநதாலும் போதாது. இததொழிலுக்கு வளையலகாரியிடததிலும ஆடையணிகள, தோறறம, வணணம இவைகள வேணடியிருககினறன. வளைகளைப போட்டுககொளபவாகளை மட்டுமனறி, அவவளைகளுக்குப பணஙகொடுப்போரின மனத்தையும கவரககூடிய ஆறறல உளளவரே தொழிலில வலல வளையலகாரிகள ஆவா. ரஜியாவின அனனை மட்டும அககாலததில சாதாரண அழகுடையவளாகவா இருந்திருப்பாள? கடடிடம அழகாக இருந திருக்கவேணடுமெனறு இடிபாடுகள கூறுகினறனவே!

நகாததில நான தஙகவேணடிய காலம மிகுதியாக ஆக ரஜியாவைக காணுவது அரிதாயிறறு. காணும நாளும வநதது வெகுநாட்களுககுப பிறகு அவளை என கிராமததில கணடேன அவள பினனுல் ஓா இளைஞன வளைபபெட்டியைத தலைமேல சுமநது வருவதையும பாாததேன எனனைப பாாததததுமே அவள கூனிக குறுகி வெட்கம அடைநதாள. அவன அவளுடைய கணவன எனபதை அறிநதுகொணடேன. ஆயினும அறியாதவனைபபோல, “இநதக கூலியாளை எஙகிருநது அழைததுவந்தாய?” என்று கேட்டு வைததேன. “இவரையே கேளுஙகள கூட ஒட்டிக் கொணடுவிட்டால நான எனன செயவேன?” எனறுள. இளைஞன் புனமுறுவல் பூததான. ரஜியா நகைததுக கொணடே, “இவர் என கணவா, எஜமான!” எனறுள.

கணவன்! அநத இளமபருவததது முதல் சந்திப்பில் அவள அனனை விளையாட்டாகக கூறிய அப்பேசசு எஙகே மறைந்துகிடந்ததோ அறியேன, திடீரென்று

அது இன்று கிளாந்தெழுந்தது. அன்று நிச்சயமாக என் நெற்றியில் சுருககங்கள உணடாகி யிருககவேண டும். நானும ஒருத்திக்குக் கணவன் ஆகிவிட்டேன. என மனைவிககு வளையல்போட அன்று ரஜியா வந்திருந்தாள். அனறு என வீட்டுக் கூடத்தில் இநதப் போககிரி எததனை கூததடித்தாள்! ''இதை எடுததுககொளளுவேன, அதை வாஙகிக்கொள்ளுவேன. நான் விரும்பிக் கேட்ட பொருள கிடைககவிலலையாயின 'அவரை'யே எடுத்துக்கொணடு விடுவேன. மருமகள தவிததுப போவாள!'' எனறுள அவள. ''சீசீ ஓடு. ஐயாவை நீ எடுததுககொண்டுவிட்டால உனனுடைய இநத ஆணபிளளை எனன செயவான பாவம!'' எனறு என அணணி கூறினுள் ''இவரும தவிததுககொண டிருபபார'' எனறு சொலலி, ரஜியா உரகக நகைததாள அவனிடம விரைநது சென்று,''ஐயா, என ராஜா, வேறு வகையாக எண்ணுதே'' எனறுள. அவனும நகைததான ரஜியா தன காதறகதையை விரிதது துரைககத தொடஙகினுள அநத ஆடவன எபபடி அவள பினனே திரியத தொடஙகினுன எனறும, எத தனை இடையூறுகள ஏறபட்டன எனறும, பிறகு எவ வாறு மணம நடநதது எனறும, இனறும அவன, அவள நிழலபோல எபபடி அவளையே சுறறித திரி கிறுன எனறும கூறினுள அவன மனத்தில எததகைய அசசம குடிகொண டிருந்ததோ தெரியவிலலை. பிறகு என மனைவியின கையைப பறறியவாறே, ''அமமா, எஜமானும உன பினனுல இவரைப போலவே நிழலாகத் திரிந்துகொண டிருககட்டும'' எனறுள. கூடம முழுவ தும நகைபபொலி நிரமபியது. அநத நகைபபில ரஜியா வின காதில இருநத வளையஙகள அறபுதமான ஒளியை வீசின எனறு எனககுத தோன்றியது.

* * * *

வாழ்க்கைச சகடம் மேடுபள்ளமான வழியில ஓடிககொண டிருநதது, நான், ரஜியா இருவருடைய

சகடமுந்தான். வெகுநாட்களுக்குப் பிறகு பாட்னுவில் அவளைச சநதிததபொழுது பினவரும செயதி எனக்குத் தெரியவநதது இது எதிாபாராத நிகழ்சசிதான்; ஆனால இதைச் சந்திபபு என்று கூறலாமா?

நான இபபொழுது பெருமபாலும வீட்டை விட்டு விலகித தூரததிலேயே இருநது வந்தேன. எபபொழு தேனும வீடு சென்றால மாலையில் செலலுவேன; காலை யிலேயே புறப்பட்டு வநதுவிடுவேன். எததனையோ பொறுபபுகள், எததனையோ தொநதரவுகள். இநநாட் களில நான பாட்னு நகரததிலேயே இருந்தேன். அங்கே ஒரு சிறு பததிரிகாலயததில் வேலை செயது வநதேன. சமையறகாரனைபபோல இருந்தேன். ஆனால உலகம எனனவோ எனனை அபபத்திரிகையின ஆசிரிய னுகவே நினைததது. அநநாட்களில இததனை பத்திரிகை களும இலலை, ஆசிரியாகளும இலலை அதனால் எனககு மிகக மதிபபு இருநதது எனபதையும நான அறிவேன். அலுவலகததிலிருநது வெளிவநததுமே மககள எனனைச் சுட்டிககாட்டிக 'கிசு கிசு'வென்று பேசுவாாகள். உல கம இவவாறு எனனைக கவனிபபதால எப்பொழுதும என பதவியின உயாவைபபறறியே நான நினைபபேன.

ஒரு நாள நான கடைததெருவிலுளள ஒரு பெயா பெறற வெறறிலைபாககுக கடையில தாமபூலம தரித துககொண டிருநதேன எனனுடன எனனைப புகழும ஒரிரு இளைஞாகளும இருநதனா இரணடொரு முதி யோரும வநது நினறனா நாஙகள வெறறிலைபாககுப போட்டுககொண டிருநதோம கேலிப பேசசுகளும் நடநதன அபபோது ஒரு சிறுவன வநது, ''ஐயா, அநதப பெணமணி உஙகளைக கூபபிடுகிருள'' என்ருன.

ஒரு பெண அழைககிருள. அதுவும கடைததெரு வில! நான திடுககிட்டேன. இளைஞர்களிடையே சிறு சலசலபபு உணடாயிறறு. பெரியோாகளின முகததில மறைவாகப பளிசசிட்ட புனசிரிபபும என பாாவைக குத தபபவிலலை அவள் யார்? என முகத்தில

கோபம் பொங்கியது. அப்பையன் ஓடி மறைந்துவிட்டான்.

வெற்றிலை போட்டுக்கொண்டு அனைவரும் கலைந்து சென்றதும் அப்பையன் சுட்டிய இடத்தை நோக்கி என் கால்கள் செல்வதை உணர்ந்தேன். கொஞ்ச தூரம் முன்னால் சென்றதும் தெரிந்தவர்கள் எவரும் என்னைக் கவனிக்கவில்லையா என்று திரும்பிப் பார்த்தேன். ஆனால் இந்தக் கடைத்தெருவின் மாலைநேர ஆரவாரத்தில் ஒருவருக்கு இன்னொருவரைக் கவனிக்க நேரம் ஏது? நான் நடந்து சென்று சற்றுக் கிழக்கில் இருந்த அரசமரத்தை அடைந்தேன் அங்கே சென்றதும் மரத்தின் கீழிருந்த மேடையின் ஓரத்திலிருந்து ஒருத்தி என்னை நோக்கி வந்துகொண்டிருப்பதைக் கண்டேன் அருகே வந்ததும், ''சலாம், எஜமான்'' என்றாள்

எனக்குப் பெரிய அதிர்ச்சி உண்டாயிற்று ஆனால் அவளைத் தெரிந்துகொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை. அவள் தலையை நிமிர்த்தியதும் காதுகளில் வெள்ளிவளையங்கள் ஒளிவிடக் கண்டேன்

''ரஜியா, இங்கே எப்படி வந்தாய்?'' என்ற சொற்கள் என் வாயினின்று தாமாகவே வெளிப்பட்டன.

''வியாபாரத்தைப் பெருக்க வந்துள்ளேன், எஜமான்! இப்பொழுது மனிதர்கள் புதுமாதிரியானவர்களாக ஆகிவிட்டார்கள் அல்லவா? இப்பொழுது அரக்கு வளைகள் யாருக்குப் பிடிக்கின்றன? புது மனிதர்களுக்குப் புது வளைகள் வேண்டியிருக்கின்றன. அழகுபடுத்திக் கொள்வதற்கு வேண்டிய வேறு சில பொருள்களையும் எடுத்துச் செல்லுகிறேன்: பவுடர், கொண்டை ஊசி, இன்னும் என்ன என்னவோ? புதிய தலைமுறைப் பெண்களுக்குப் புதுப்புது வழக்கங்கள், விருப்பங்கள் ''

பிறகு சிறிது நிறுத்திவிட்டுக் கூறினாள்; ''தாங்கள் இங்கே இருக்கிறீர்கள் என்று கேள்விப்பட்டேன் எஜமான், எங்கே இருக்கிறீர்கள்? நான் அடிக்கடி வந்து கொண்டிருக்கிறேன்'' என்றாள்.

'நீ தனியாக இருக்கிருயா அல்லது?' என்று கேடக எண்ணுகையில் ஒரு நடுத்தர வயதுளள மனிதன் வந்து வணங்கிஞன. அவன்தான் ஹஸன். நீணட தாடி, ஐநது முழ உயரம, கட்டுத தளராத உடல. ''பாருஙகள ஐயா, இனறுகூட எனனைத தொடாவதை நிறுததவிலலை'' எனறு கூறி ரஜியா நகைததாள. இப்பொழுது ரஜியா அநதப் பழைய ரஜியா அலல. ஆஞல் சிரிபபு மடடும அதே பழைய சிரிபபுததான. அதே சிரிபபு, அதே பரிகாசம ஏதேதோ பேசிககொண டிருநதாள. இனனும எவவளவு நேரம் பேசியிருப்பாளோ, திடீரெனறு, 'நான எஙகே நினறுகொண டிருக கிறேன? இபபொழுது நான் யார்? எவராவது பார்தது விடடாலோ?' எனபன போனற எணணஙகள நினைவிறகு வநதன

ஆஞல அவள இடஙகொடுததாலதானே? நான் போகவேணடுமெனறு சொனனதும ஹஸனைப பாாதது, ''எனன பாாககிருய? ஐயாவிறகு வெறறிலை பாககாவது தரவேணடாமா? எததனை தடவை ஐயாவின் வீட்டில் சுவைத்துச சுவைதது வயிறு நிரமப உணடிருககிருய்'' எனருள

ஹஸன வெறறிலை பாககு வாஙகிவரச் சென்றதும ரஜியா பேசிக்கொண டிருநதாள. ''உலகம எபபடி மாறிப்போயிருககிறது பாருங்கள! இபபொழுதெல்லாம் கிராமங்களில ஹிந்துககள, முஸலிமகளிடமிருநது எப்பொருளையும வாங்குவதில்லை இபபொழுது ஹிநது வளையறகாரிகள, ஹிநது தையறகாரர்கள் வநதுவிட்டார்கள. அதஞல ரஜியாவைப்போன்ற பரமபரைத தொழிலாளிகளுககு மிகுநத தொலலை உண்டாகியிருக்கிறது'' ரஜியா ஒரு சநதோஷச செய்தியையும தெரிவித்தாள். என் கிராமத்தில இநதப் பைத்தியக்காரத்தனம் இல்லையாம். என் மனைவி ரஜியாவைத் தவிர வேறு யாரிடத்தும வளைகள் வாங்குவதே இல்லையாம்.

ஹஸன வாஙகிவநத வெறறிலைபாககைப் போட்டுக கொணடு நான் கிளமப இருககையில் நான எங்கே தஙகியிருககிறேன் என்று அவள கேட்டாள. எனககு இது இககட்டான நிலையாக இருந்தது. ''பயப்படா தீாகள யஜமான! நான் தனியாக அஙகே வரமாட்டேன. இவரும கூட இருப்பார். என்ன, அப்படித்தானே என ராஜா?'' என்று கூறிக் கணவனைத் தழுவிககொண டாள ''பைத்தியமே, இது பட்டணம் அம்மா, பட் டணம!'' என்று சொலலிககொணடே ஹஸன அவள கைககளை விலககிவிட்டு, ''ஐயா, இவள பிளளை குட டிகள பெறறு விடடாள. இனனும சிறுபிளளைததனம போகவிலலை'' என்று சிரிததுககொணடே கூறினன.

மறுநாள பாாககிறேன, ரஜியா என விடுதிககே வநதுவிடடாள. ''யஜமான, இவவளைகள ராணிககாக'' என்று சொலலி என கைகளில சில வளைகளைக கொடுத தாள ''நீதான என வீடடுககுப போகிறுயே; எடுததுக கொணடு போய் நீயே கொடுததுவிடேன'' எனறேன.

''இலலை, எஜமான, ஒரு முறை உஙகள கைகளா லேயே போடடுப பாருஙகள'' என்று சொலலி நகைத தாள ''இநத வயதிலா?'' என்று நான சொனனதும, அவள ஹஸனை நோக்கி, ''இவரிடம கேளுஙகள, இனறுவரை இவா எனககு வளைகள போடுகிறுரா இலலையா?'' என்றுள. ஹஸன சிறிது வெடகமடைந தான உடனே, ''பெரிய ஆள ஐயா இவா. இபபொழுது ஏதோ போல முகததைதத தூககிவைததுககொண டிருக கிறுரே, ஆனுல என் கையைப் பறறியதும '' என்று சொலலிக கல கலவென்று நகைததாள. நான திடுககிட்டு நாறபுறஙகளிலும பார்ககலானேன.

* * * *

ஆம, அனறு எதிாபாராது அவளுடைய கிராமத திறகுச சென்றேன. தோதல சுழல எங்கேதான அழைததுச செலலாது? எந்த மூலை முடுககிலதான

கொண்டு நிறுத்தாது? மூக்கில் பெட்ரோல் புகையின் நாற்றம். காதுகளில் 'ஙொய' என்ற சத்தம். முகத்தில் தூசிதும்புகளின் 'அமபாரம்', சோர்வு, குழப்பம. ஆனால் அந்தக் கிராமத்திற்குள் என் ஜீப் நுழைந்ததுமே ஒரு புதிய உணர்ச்சி என் மனத்தை நிரப்பியது.

இது ரஜியாவின் கிராமம். இங்கே ரஜியா வசித்து வந்தாள். ஆனால் ரஜியா என்ற பெயருடைய ஒரு வளையற்காரி இங்கே இருந்தாளா அல்லது இருக்கிறாளா என்று இன்று நான் கேட்க முடியுமா? அவள் ஹஸனின் பெயரைச் சொல்வதற்குக்கூட வெட்கமாக இருந்தது. நான் அங்கே தலைவனாகச் சென்றிருக்கிறேன். எனக்கு ஜே கோஷம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். சிலர் என்னைச் சூழ்ந்து நின்றிருந்தனர். நான் எவர் வீட்டுக்குச் சென்று வெற்றிலை போட்டுக்கொள்ளுகிறேனோ அவர் தம்மைப் பாக்கியசாலியாகக் கருதுவர் எவரோடு நான் இரண்டு பேச்சுக்கள் பேசுகின்றேனோ அவரைப்பற்றியே ஊரில் எல்லோரும் பேசுவார்கள். இச்சமயத்தில் நான் பெரிய மனிதனாகவே நடந்துகொள்ளவேண்டும்.

ஜீப்பிலிருந்து இறங்கி அங்குள்ளோரிடம் பேசிக்கொண்டிருந்தேன். கற்பனைக் குன்றின்மீது நின்று, வரப்போகும் பொற்காலத்தைப் பற்றிய செய்தியை மக்களுக்குக் கூறிக்கொண்டிருந்தேன் என்றுதான் வைத்துக்கொள்ளுங்களேன் ஆனால் மூளையில் ஏதோ சிக்கல்கள் எழுந்துகொண்டிருந்தன. நாக்கு, பழக்கத்தால் இயங்கிக்கொண்டிருந்தது உள் மனம் வேறு ஏதோ எண்ணச் சிக்கலில் உழன்றுகொண்டிருந்தது இரண்டிற்கும் வேறுபாடு ஒன்றும் இல்லை. ஆனால் இவற்றில் ஒன்றின் போக்கையாவது தடைசெய்ய இயலுமா?

திடீரென்று இது என்ன? அதோ ரஜியா வந்துகொண்டிருக்கிறாளே! ரஜியா! சிறுமி ரஜியா! அட, ரஜியா திரும்பவும் சிறுமியாகிவிட்டாள்! காதுகளில் அதே வளையங்கள், சிவந்த முகத்தில் அதே நீலக் கண்கள், அதே முழுக்கை ரவிக்கை, அதே குழற்கற்றை.

அதைச் சரிசெய்து, கொணடே முனனுல வருகிருள். இடையே நாறபது அலலது முப்பத்தைந்தாணடுகள இடைவெளி! நான கனவு காணகிறேனு? பகறகனவா? வருகிருள அநதப் போககிரி. இநதக் கும்பலில் நுழைநது என் அருகே வருகிருள். 'ஸலாம' செயகிருள. என கையைப பறறிகொணடு, ''வாருஙகள் எஜமான, என விட்டிறகு'' எனகிருள்.

நான திகைததுப போயவிட்டேன. ஒனறும தோனறவிலலை அறிவிறகு ஒனறுமே புலனுகவிலலை. சுறறிலும இருந்தவா முகததில புனசிரிபபுத தவழ்நதது 'தலைவரே, இனறு தஙகள சாயம் வெளுதது விட்டது' எனற குரல கேட்கிறது. இலலை, இலலை. இது கனவு. காதில வீழகிறது இதுதான். ''என்ன மரியாதை தெரியாத பெண'' எனகிருன ஒருவன. மற ெருருவன, ''பாட்டிககுச் சரியான பேததி'' எனகிருன். மூனருமவன நான் என இயலபான நிலையை அடையமருநது கொடுததான. ''இவள ரஜியாவின் பேத்தி ஐயா! பாவம, அவவேழை நோய்வாயபபட் டிருககிருள தஙகளைப்பறறி அடிககடி சொலகிருள. மிகப புகழநது பேசுகிருள. ஐயா, நேரம இருககுமானுல் கொஞசம சென்று பாருங்கள். அவள பிழைததெழுவாளோ என்னவோ ?'' எனருன.

நான ரஜியாவின வீட்டுக கூடத்தில் நினறேன். மிகச சிறிய சுத்தமான வீடு. நனகு மெழுகித தரை வழுவழுவெனறு இருககிறது. நிறைவடைநத இலவாழககை. உழைப்பு உணமை எனபவறறின பயன. ஹஸன மறைந்துவிட்டான. ஆனுல் தனககுப் பினனே மூனறு ஹஸன்களை விட்டுச் சென்றுளளான. மூத்த மகன கல்கத்தாவில் சமபாதிககிருனும. நடுபபிளளை பரம்பரைத் தொழிலில் ஈடுபட்டுள்ளான. கடைக்குட்டி நகரததில் படித்துககொண் டிருககிருன். இசசிறுமி மூத்த மகனின் பெண. பாட்டனை அப்படியே உரித்து வைததிருககிறது பாட்டியின் முகம் பேத்தியிடம் அப்

படியே அமைந்துள்ளது. எதிரே ரஜியா, குட்டி ரஜியா! இந்தக் குட்டி ரஜியா என் கையைப் பற்றியவாறே தாழ்வாரத்தில் இருந்தபடியே, ''பாட்டி, ஓ பாட்டி, அறையிலிருந்து வெளியே வா. யஜமான ஐயா வந்து விட்டார்'' என்று அழைத்தாள். ஆனால் பெரிய ரஜியா வெளியே வரவில்லை. எப்படி வருவாள்? நோயாளிக்குரிய அழுக்கடைந்த கந்தை உடைகளுடன் என் எதிரே எவ்வாறு வருவாள்?

ரஜியா தன் பேத்தியை என்னவோ அனுப்பியிருந்தாள். ஆனால் ஆகாயவிமானத்தில் பிரயாணஞ் செய்யும் நானா இப்பொழுது அவள் வீட்டுவரை வரும் தொல்லையை மேற்கொள்வாரென்று அவள் நம்பவில்லை. நான் வந்துகொண்டிருக்கிறேனென்று கேள்விப்பட்டதும் தனது உடைகளை மாற்றி வேறு உடைகளை அணிந்து விடும்படி தன் மருமக்கள்மார்களிடம் கூறினாள். எத்தனையோ நாட்களுக்குப் பிறகு யஜமானைச் சந்திக்கிறாளல்லவா?

அவளுடைய இரண்டு நாட்டுப்பெண்களும் அவளை மெதுவாகக் கூடத்திற்கு அழைத்து வந்தனர். ரஜியா-ஆம், என் எதிரே ரஜியா நின்றிருந்தாள், வலியிழந்து, மெலிந்து ஆனால் அருகே வந்து அவள், ''சலாம், யஜமான்'' என்று கூறியதும் சிலந்தி வலைபோல் இருந்த அவள் முகத்துச் சுருக்கங்கள் ஒரு கணநேரத்திற்கு மறைந்துவிட்டன. அவளுடைய முகம் திடீரென்று மின்சார 'பலப்' போல ஒளிர்ந்தது. பள்ளத்தில் வீழ்ந்து கிடந்த அந் நீலக் கண்கள் பளீரென்று மிளிர்ந்தன. அந்த வெள்ளி வளையங்களும் இன்று மின்னின.

மேலும் பார். பார்த்து உன்னைத் தூயமைப் படுத்திக்கொள். அவளுடைய முகத்தின்மீது தவழ்ந்து ஒளிரும் அக்குழற் சுருள்களை-காலம் நன்கு கழுவி மென்மையாக்கியுள்ள அக் குழற் சுருள்களைப் பார்.

# பலதேவ ஸிம்மன்

நிலை தவறிய நட்சத்திரம்போல ஒரு நாள் எதிர்பாராது எங்களிடையே அவன் வந்து கலப்பதைக் கண்டோம். ஜோதிப் பிழம்பு, ஒளித்திரள், காந்தியின் நிறைவு! அந்த நட்சத்திரத்தைப்போலவே ஒரு கண நேரம் ஒளி வீசி நம்மைத் திகைக்கச் செய்து அவன் திரும்பாமலே சென்றுவிட்டான். அவன் வந்த அன்று வியப்பு உண்டாயிற்று, சென்ற அன்று செயலிழந்து போனோம்

களத்தில் தானியத்தை அம்பாரமாகக் குவித்திருந்தார்கள். அதைக் காவல் செய்வதற்காகக் கட்டப்பட்டிருந்த குடிசையின் எதிரே தீவட்டி எரிந்துகொண்டிருந்தது. வயலில், களத்தில் எங்கும் லேசான பனி மூடியிருந்தது அதைப் பிளந்துகொண்டு உள்ளே வரச் சூரியனின் இளங் கதிர்களுக்குச் சிறிது கஷ்டமாகவே இருந்தது. நல்ல குளிர். கொஞ்சங் கொஞ்சமாகக் குளிர்காற்று உட்புகுந்து இதயத்தையே நடுங்கச் செய்தது. எல்லோரும் தீவட்டியையே சூழ்ந்துகொண்டிருந்தோம். அத்தீவட்டி எரிந்து அணைந்துவிட்டது. சிவப்புத் தழல் ஒளி வீசிக்கொண்டிருந்தது. தணல்மீது சாம்பர் படியப்படிய நாங்கள் அதனை எங்கள் மார்போடு மார்பாக வைத்துக்கொள்ள விரும்புவோர்போல அதன் அருகே அருகே நெருங்கிக்கொண்டிருந்தோம் ஒரு வகைச் சத்தமும் இல்லை களத்தின் மத்தியில் தீவட்டிக்காக நடப்பட்டிருந்த கம்பத்தின் நுனியில் ஒரு கரு நிறப் பறவை உட்கார்ந்துகொண்டு, ஒவ்வொரு சமயம் கத்தி, அந்த நிசப்தத்தைக் கலைக்கச் சிறு முயற்சி செய்துகொண்டிருந்தது.

இச் சமயத்தில் ஓா இளைஞன, வநது, தொலைவில இருநதே என மாமாவைப் பாாத்து, உரதத குரலில், ''வணக்கம, மாமா'' எனறுன. எஙகள அனைவருடைய கவனமும அவன் பக்கம செனறன இளம வாலிபன்; இப்பொழுதுதான மீசை அருமபியிருநதது. சிவநத நிறம. சூரியனின கிரணஙகள அதறகுத் தஙகததின பளபளபபை அளித்தன. வலககையில நீணட சிவநத மூஙகில தடி, அழகிய தடி; கணுக்கள் நிறைநதது இடக்கையில் 'லோட்டா' ஒன்றை எடுததுககொணடு இப்பொழுதுதான் கைகால கழுவிவிட்டு வந்துகொண டிருநதான் அவன நீணட பழுப்பு நிறமுளள பெரிய சடடையை அணிந்து கொண டிருந்தான. அதனுள இருநதுகூட அவனது உடறகட்டும அழகும நனகு விளங்கிககொண டிருநதன.

''அடே, பலதேவனு, எபபொழுது வநதாய? வெகு நாள கழிதது வநதிருககிருயே நன்ருகச சமபாதிக கிருயே. நனருக இரு. ஆனுல எஙகளையும மறவாதே அபபா. இரணடு ஆணடு கழித்து வந்திருககிருய்'' எனறு மாமா அவனை விசாரிததாா. மிகக வணககத் துடன அவன மனனிப்புக கேட்டுககொணடான். ''மாமா, இனிமேல இஙகே இருபபதாகவே நினைததிருக கிறேன. பல இடங்களில சுறறினேன. எநத இடமும் மனததிறகுப் பிடிககவில்லை. பாட்டன வீடும அலுத்து விடடது பிதுராா்ஜிதமான இநத மண் எனனைக கயிறு கட்டி இழுககிறது. அதனுல் நிலையாக இஙகேயே வசிப்ப தறகு வநதிருககிறேன. ஒரு வீட்டை ஏறபாடு செயது, அமமாவையும பாட்டன வீட்டிலிருநது அழைததுவரப் போகிறேன் இனிமேல உஙகளுககு ஊழியம செய்தே என வாழநாட்களைக கழிககலாம எனறு இருக்கிறேன.''

பலதேவஸிமமன இஙகேயே வசிபபாா என்று அறிந்ததும இளைஞர்களின் மகிழ்சசிககு எல்லையில்லாமல் போயிறறு. பலதேவனின தநதை நலல காளைப பருவத்தில இறந்துவிட்டார். பலதேவன் அப்பொழுது சிறு குழந்தை. அவனுடைய தாய் அவனை எடுததுக்கொணடு

தன தாய் வீடு சென்றுவிட்டாள. அப்பொழுது முதல அநத ஏழை அஙகேயே இருக்கிருள .வயது வநததும பல தேவன கிழககே சென்ருன். அங்கே வங்காளத்தில் ஓர் அரசனுடைய ஆஸ்தானத்தில் பயிலவாளுக இருந்தான். நிறையப பணம் சமபாதிததான. இப்பொழுது அவனுக குத தனது பிதுரார்ஜித நிலததின் ஞாபகம வநதது

இடிநது கிடந்த அவவீடு மறுபடியும வசிபபதறகு இடமாயிறறு.

அவன் வநததால் கிராமம மலர்சசி பெறறது; அதறகு உயிா வநதது, இளமை வந்தது; விளையாட்டரங கம் ஏறபட்டது அதில் பலரும குஸதி பழகிஞர்களா. காலையில குஸதி, மாலையில கததி விளையாட்டு, சிலமபம, விழா நாளன்று பலதேவன தன மாளுககாகளுடன செல்வதே ஒரு காட்சிதான.

முனளுல பலதேவஸிமமன போயக்கொண் டிருந் தான அவன கால்களில பூட்ஸ அதை வஙகாளத்தி லிருந்தே கொணடுவநதிருநதான். இடுப்பில் கசசம வைத்த வேஷடி. அதை ஒரு தனிபபட்ட மாதிரியில அணிநதிருப்பான அது முழஙகாலுககுச சறறுக கீழே இறங்கியிருககும. முழஙகாலுககருகே மடிப்புகள இருக கும். அவை நடக்குமபொழுது இங்கும அங்கும் பறக் கும. நீணட சட்டை அணிந்திருப்பான. அதற்குத தோள்பட்டையில் ஒரு பொத்தானே இருககும. சட்டை மிகப் பெரியது யானையின துதிக்கை உட்புகுமாறு அததனே பெரிய அகனற கை. கழுத்தில் தஙகததா லான சிறு மணிமாலை. சில மணிகள் சதுரமாகவும சில வட்டமாகவும இருந்தன. தலையில் சரிகைக கரையுளள பாகை. அதன் ஒரு நீணட நுனி அவனுடைய முதுகின மீது புரளும் கையில் கடுகு எணணெயும பாலும் தடவித் தடவிப் பதம் செய்யப்பெறற சிவந்து நீணட தடி. சிற்சில சமயம் அந்தப் பருத்த தடியின் நுனியில், இடுப்பில் சட்டைக்கு அடியில் தொங்கிக்கொண் டிருக்கும் பிக்காசின் முனையைப் பொருத்தி ஒரு நிமிஷத்தில் அதை

யமனுககிவிடலாம். தனது சகதியிலும மிடுக்கிலும அவனுககு மிகுநத நமபிககை இருநதது. தலையை உயாத்தி, மாாபை முனனுல தளளிககொணடு சிங்கம போலச செலவான முன்னுல் அவன் செல்லப் பினனுல் இதேமாதிரி அவன மாணுககா கூட்டம் தொடரும். வழியில, பேடடைகளில அவனுடைய அழகிய கட்டு வாயநத உடலைக கணடால யாருடைய கணகளதாம திருபதி அடையாமல் இருககும.

உடலில் இததனை பலம்; ஆனுல இயலபு எப்படித தெரியுமா? குழநதைகள் இயல்புபோலக களளமறறது; மாசறறது. முகததில எப்பொழுதும புன்னகை தவழும எல்லோரிடமும் பணிவாகப பழகுவான. அவனுககுக கோபம் வந்து ஒருபொழுதும் நான கணடதிலலை எலலோருககும தொணடுசெயவதற்கு எப்பொழுதும அவன சிததமாக இருநதான். குழநதைகள் அவனைக கண்டதுமே தழுவிககொளவர். வயது சென்ற வா தம பாாவையால எபபொழுதும ஆசீாவாதஙகளைப் பொழிவாாகள வாலிபர்களுககோ அவன் தேவதையே ஆகிவிடடான.

அநநாட்களில ஹிந்து முஸலிம் சசசரவே இலலை: இருவகையினரும பாலும சாககரையும போலக கலந்து வாழநதனர். ஹிந்துககளின ஹோலிப பணடிகையில முஸலிமகளின தாடிககு வர்ணம் ஏறும; முஸ்லிம்களின தாஜியா* வில ஹிந்துககள் தோள கொடுப்பர்.

ஒரு முஸலிமகூட இலலாவிட்டாலும எனது கிராமததிலும தாஜியாவுக்கு ஏறபாடு செய்வாாகள். அதறகுச செயய வேணடிய சடங்குகளைச செய்வதறகு

---

*தாஜியா - மூங்கில்களால் கட்டப்பட்ட சமாதி போனற மணடபவடிவில அமைககபபடட ஒன்று. அதில இமாம் ஹுஸேனின சவம இருப்பதாகக்கொணடு, அதன எதிரே அமாநது முஹர்ரம் பணடிகையில் முஸ்லிம்கள் சோக கீதம் பாடுவா. பிறகு அதை ஊர்வலமாக எடுத்துச் சென்று புதைபபா.

ஒரு வயதான மௌலவியை அழைப்பார்கள். தாஜியா விற்கு அருகே சென்று ஆரவாரம் செய்வதுமட்டுமே எங்களுக்கும் தாஜியாவிற்கும் உள்ள தொடர்பு. மாலை நேரம் வரும் வரையில் உணவருந்திவிட்டு எல்லோரும் ஒன்று கூடுவர்; டமாரம் முழங்கும்; சிலம்பவிளையாட்டு விளையாடுவர். குஸ்திச் சண்டை போடுவார்கள். ஆட் டங்கள் ஆடுவர். கழி விளையாட்டு, பலவகையான கஸரத் துகள் இவைகள் நடக்கும் பெண்களும் குழந்தைகளும் 'மார்ஸியோக்'* கூச்சல் போட்டுக்கொண் டிருப்பார்கள். வேடிக்கை விளையாட்டிலேயே பாதி இரவு கழிந்துவிடும்

தாஜியா என்பது துக்கநாள். கிராமத்திலிருந்து தொலைவிலுள்ள ராஜபுத்திரர்கள் வசிக்கும் ஓரிடத்தில கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருப்பார்கள். அங்கே அக் கம் பக்கத்திலுள்ள தாஜியாக்களை யெல்லாம் ஒன்றுகச் சேர்ப்பார்கள். தாங்கமுடியாத கூட்டம். பலவகை நிறமுள்ள ஆடைகளின் பளபளப்பு முதியோர். வாலிபர், குழந்தைகள், பெண்கள் இவர்கள் வருவார்கள் விதவித மான வாத்தியங்கள் ஒலிக்கும். இனிமையான குரலில 'யா அலி' என்னும் ஆரவாரம் வானத்தைப பிளக்கும். திசைகள் அதிரும். ஆகாயம் அலறும் இதயங்கள் நடுங் கும். அக்கம் பக்கத்திலுள்ள வாலிபர்களுக்கோ இது தான் திருநாள். எல்லோரும் நன்கு உடுத்துக்கொண்டு வந்திருப்பார்கள். ஓரிடத்தில் குஸ்திச் சண்டை நடக் கும். இன்னேரிடத்தில் ஆட்டுக் கிடாய்ச் சண்டை. மற்றோரிடத்தில் சிலம்பம்; கழிவிளையாட்டுச் சிலம்பத்தில் தங்கள் திறமை முழுவதையும் காண்பிப்பர். பார்த்துக் கொண்டே இருக்கையில வேடிக்கை பார்ப்போரின் கூட்டம் இரு பிரிவாகப் பிரியும். ஒரு பிரிவு, ஒருவருக் குச் 'சபாஷ்' போடும். இன்னென்று மற்றொருவருக்குப் போடும். இரு பிரிவினரும் தங்கள் தங்கள் ஆள் வெற்றி

*மர்ஸியோ: முஹாரம் நாளில முஸ்லிம்கள் இசைக்கும் சோககீதம.

பெறவேணடுமென்று விருமபுவா. சிறசில சமயங்களில் இநதப் பாராட்டு நடைபெறுகையில உருடடல மிரட்டலகள தொடஙகும. கணகள சிவககும தோள் துடிககத தொடஙகும. நிசசயமாகச் சச்சரவு ஏறபடும் என்று தோனறும. ஆனால அநேகமாக இநத மன நிலையை அறிவு வெனறுவிடும சிறிது நேரத்தில கடலின கொநதளிபபு அடஙகிவிடும. திருமபவும கணகளில ஒளியும உதடுகளில சிரிபபும மலரும

நாங்களும எஙகள தாஜியாவை எடுததுககொணடு 'ரன' சென்றோம ஓரிடததில ஆட்டுக்கிடாயச சணடை ஆஹா, என்ன சொலல! இநதச் சிறு மயிரடாநத மிருகஙகள - தஙகள சொந்தககாரரகளின பினனால கபடமற்றுத திரிநதுகொண டிருபபவை - ஒனறு மறறொனறின மீது எபபடிததான மோதுகினறது! அவறறின கொமபுகள மோதுமபொழுது பெருதத சததம உணடாகும. புகை கிளமபுவதுபோல இருககும மோதலுககுப் பின மோதல் அவறறுள ஒனறு கீழே விழ வேணடும்; அலலது எவரேனும அவறறை விலக்கிப் பிடிததுக் கொளள வேணடும சணடைககு முன்பு அவறறின வாயில மிளகாயைக கொடுதது இன்னும ஆவேசம் கொளளச செயவாரகள் நான அநதச சணடையிலேயே மனம ஒன்றியவனாகப பார்ததுககொண டிருநதேன

திடீரெனறு ஒரு பெரிய கூசசல எழுநதது அனைவரும ஒரு பககமாக ஓடிச சென்றுகொண டிருநதனர். அஙகே ஒரே அடிதடி இநத அடிதடி, விளையாட்டு அடிதடி யலல பலருடைய தலைகளிலிருநது ரததம ஊறறுககச சுரநதுகொண டிருநதது

அடே, இடையிலே இவன யார்? பலதேவஸிமமன! பழைய நகைமுகமுளள பலதேவஸிமமன அல்லன சாக்ஷாத பீமஸேனனே ஆகிவிட்டான. கணகளில தீப் பொறிகள பறநதன. தலையில பட்ட தடியடியால ரததம பெருகி, நெற்றியின வழியாகப் புருவத்தினமீது

கட்டி தட்டிப் போர்ப் படிந்திருககிறது. இரண்டு கைகளிலும இரு தடிகளைப பறறிச் சுழற்றிககொண டிருக்கிறுன். அவன செலலுமிடமெல்லாம பூகமபந தான். இதோ ஒருவன் அவனை நோக்கித தடியைச் சுழ்றறிக்கொண்டு வருகிறுன; அவனைப் பாாததும நின்றுவிட்டான். வநதவன தடியை ஓஙகியேவிட்டான் பலதேவஸிம்மன் விரைவாகத் தன தடியின் இரு முனை களையும இரண்டு கைகளாலும தன தலைககுமேல தூக கிப பிடித்துக்கொணடான. எதிாதது வநதவனின தடியின அடி இவனது தடியின்மீது வீழநதது இரு முறை, மும்முறை விழுநதது. ஒவவொரு முறையும தனது தாககுதல் வீணுவதைக கண்டு அவன ஒடத தொடஙகினன். ஆனுல இப்பொழுது பல தேவஸிம மன் முறை. ஒரே அடி, அவ்வளவுதான அவன தலை சுற்றிக் கீழே விழுநதான. அட, என்ன நடககப் போகிறது? நாறபுறமும கூச்சலும் குழபபமும எழுந தன. பலா ஓடத் தொடங்கினா. இபபொழுது அஙகே பாரதப் போரே நடககப போகிறதெனறே அனை வரும் நினைததனா யாா, யாரை, என்ன சொல்லிச சமாதானபபடுததுவது? யாா எவர் பேசசைக கேட்கப போகிருாகள? பலதேவஸிமமனைச சமாதானபபடுததா மறபோனுல அமைதி எபபடி ஏறபடும?

சடடெனறு வயது செனற எங்கள் மாமா முனனுல வந்தார். ''பலதேவ்!'' எனறு உரககக் கூவிஞா பல தேவஸிமமனின் ஆவேசம அடங்கிவிடடது காலகள அதே இடத்தில் பதிந்துவிட்டன. கைகள் செயலறறன ஆனுல் உடனே சமாளித்துக்கொணடு, ''மாமா. நீஙகள் எனனைத் தடுககாதீர்கள. இவர்கள தடிகொணடு சண்டை செய்வதில தமக்கு ஒப்பே இல்லை எனறு காவங் கொணடிருககின்றனா. தடி என்ருல் என்ன எனறு இவர்களுக்குச் சிறிது காட்ட விருமபுகிறேன்.'' எனருன. மூச்சு வேகமாக வந்துகொண் டிருந்தது. கோபத்தில் பேச்சு முழுமையாக வரவில்லை. உண்மையிலேயே பல

தேவஸிமமன் விரும்பி இதில் கலந்துகொள்ளவிலலை வேறு வழியினறி இச சண்டையில குதிகக நோநதது. பயில வான்கள இருவா குஸ்தி போட்டுககொண டிருந்தனர். அவர்கள இருவருமே பலதேவஸிமமனை அறியாதவாகள். அவர்களில ஒருவன அககிரமமான முறையில குஸதி போட விரும்பினுன். பலதேவ முதலிலேயே தடுததான. ''இபபடிச செயவது தவறு'' எனறு எடுத்துக கூறினுன. அவவளவுதான்; அவன பேச்சைக் கேட்டதுமே அநதப் பயிலவானைச் சேர்நதோா பலதேவனமீது பாயநதனா; கோபிததனா. ஏனெனில கழிவிளையாட்டில இவ வட்டாரததிலேயே முனனணியில் இருபபவரெனறு அவா களை மககள் கருதினா. தாங்கள நூறு கொலைகள புரிந தாலும் மனனிபபைப் பெறறுவிடலாம எனறு அவர்கள எணணிஞாகள. ஆஞல பலதேவஸிமமன் இநதப் பய முறுத்தலகளுககெலலாம பணிபவஞ? பேச்சு வளர்ந்தது; அதன பயனதான இது. வாயக கொழுப்புச் சீலையில் வழிநதது

நலல வேளை, மாமா குறுககிட்டதால பலதேவஸிம் மன அடஙகிஞன. ஆஞல இதறகுள அவன வெறறியும பெறறுவிட்டான். அவன் கையே ஓங்கி இருந்தது. அவ னுடைய மாஞககா குழாததுடன அவனை எவ்வளவு கௌரவத்துடன வீட்டிறகு அழைத்து வநதோம தெரியுமா? நாஙகள் இனறு வெறறி வீராகள. எஙகள ஊர் வெறறிபெற்ற ஊா. ஸ்ரீராமபிரான இலங்கையை வெறறிகொணடு அயோததிககுத திருமபியதுபோல இருநதது இந்த வெறறி.

* * *

ஷேர்ஷா காலம் அலலது சிவாஜியின் காலமாக இருப்பின பலதேவஸிமமன் அரசர் படையில் சோநதிருப பான. சிப்பாயிலிருநது படிபபடியாக 'ஸுபேதார்' ஆகியிருபபான். இதில் ஐயமேயிலலை. நலல உடல் தோற்றம். திறல், மிடுககு எல்லாம அவனிடம் இருந்

தன இவையெலலாம அக்காலச் சிறறரசாகளின் ஆடசியில உயாநத சேனுதிபதிப பதவியில அவனை இருத்தியிருககும. அப்படியிருந்தால பலதேவஸிமமன் எததனை கௌரவத்துடன எங்கள் ஊருககு வருவான' குதிரைமீது சவாரி செய்துகொணடு, சரிகைத தலைப் பாகை அணிந்து, நீணட மீசையுடன, முனனும பினனும பணியாளா சூழ வருவான ஆனுல் ஆங்கிலேய ஆடசியில இது எபபடி நடககும? எது நடக்க முடியுமோ அதை நாம கணடோம். வீரம் தனனை வெளிபபடுததிககொளளத தானே ஒரு வழியை வகுததுககொளளுகிறது.

எஙகள பேட்டையே தனிச சிறப்புடையது நான்கு புறங்களிலும ராஜபுத்திராகளும் இடையாகளும நெருஙகி வசிககினறனா ராஜபுததிரர்களுககு ராமபிரானின் குலததினா தாஙகள எனற காவம. இடையாகளுககோ கணணபிரான அவதரித்த யதுவமசததினா தாஙகள எனற பெருமை இரணடு வமசஙகளின இடையிலும பரமபரையாகப பகைமை தொடர்நது வருகிறது போலும' அவர்களிடையே சிறு சிறு விஷயஙகளுககெலலாம மனவேறுபாடு ஏறபடும மீசை துடிககும கணகள சிவககும தடிகளுககு வேலை கொடுபபாாகள இரணடு வமசததினரும ஒருவருககொருவா பகைவா எனறு நினைததுச சணடையிடுவா

அணணன தமபிகளுககுளளும அணடை வீடடுககாரர்களுககுளளும சணடை நடநதுகொணடே யிருககும ஒரு சாண நிலததிறகாகவோ ஒரு மாமபழததிறகாகவோ மரததின ஒரு கிளைககாகவோ ரத்த ஆறு ஓடும. இச சணடைகள அநேகமாக எதிாபாராமல் ஏறபடும. வயலகளில உழவு நடநதுகொணடே யிருககும. மரததின அடியில பேசசு நடநதுகொணடே இருககும வழியில செனறுகொணடே இருபபாாகள. திடீரெனறு' சச்சரவு மூணடுவிடும. சிறசில வேளைகளில் ஓரிடததில நினறு நிலையான போரையும புரிவர் இரு தரப்பினரும் ஓங்கள தங்கள பககஙகளுககுப் பலம சோப்பாாகள.

சகோதராகளும உறவினாகளும ஒனறு சேர்வார்கள், குடுமபததினா வநது சோநதுகொள்வாாகள சிலரைப பணஙகொடுததும சோததுககொள்வார்கள. இத்தகைய சநதாபபததில எஙகள பேடடையில் எஙகாவது நிலே யான போா மூளுமாயின நிசசயமாகப் பலதேவஸிம்மனே ஏதாவது ஒரு கட்சியினா கூப்பிடுவாாகள. 'தாமமுளள இடததில வெறறி' எனபதுபோல, பலதேவஸிம்மன இருககும் கடசி வெறறி பெறுவது உறுதி.

ஒருமுறை இததகைய தாம யுதததைதக் காணும பேறு எனககுக கிடைததது. விஷ்ணுபுரததில இரு க்ஷதரிய சோதராகள இருநதனா. இருவரும ஒதத மனத்தின ராக இருநதனா. ஆனல கடைசியில மனவேறுபாடு ஏறபடடது. ஒருவருக்கொருவர் ஜனம விரோதியாக மாறிவிடடனா வீடு, வாசல, வயல, காடு எல்லாவற றையும பிரிததுககொணடார்கள இருவரும் ஒரு வீடடில இருநதாலும இரு வேறு உலகில வசித்தனர்

ஒரு வருஷம எதிாபாராமல ஒரு மாமரத்திறகாக இரு சகோதராகளிடையேயும சசசரவு ஏறபடடது அநத உயா ஜாதி மாமரததை நாங்கள சென்று பாாத தோம கொததுக கொததாகப பழங்கள நிரமபி, ஒவ வொரு கிளேயும நிலததைத தொடுவதுபோல இருந்தது பழுதத அப பழஙகளின இடையே பசசை இலேயே காண விலலே மிகப பழைய மரம. அது நனகு படாநது தழைததிருநதது ஒவவொரு ஆணடும நலல காயபபு ஆனல இவவருஷம அது திரெளபதியின புடைவையாகி மஹாபாரதம நடததக காரணமாக இருநதது. மனத தைக கவரும இததகைய கோலம பூணடது

இநத மரததையும பிரிததுககொணடுவிட்டார்கள எனறு சொலலுகிறாாகள. இது தமபியின் பாகததைச சோநதது. அவனதான பல வருஷஙகளாக இம்மரத தின பழஙகளே அநுபவித்து வநதான. ஆனல அணண னின மகன கணககுப போட்டுப பாாததான. "இநத மாமரம என பஙகைச சேர்ந்தது; சிறறப்பா ஏமாறறி

இதைத் தம் பஙசில சேர்ததுககொண்டுவிட்டார்'' என்ருன. மரங்களின் எண்ணிக்கை, கணக்குப புததகம எலலாவறறையும் அவன தன கட்சிககு ஆதரவாகக காட்டினுன்.

ஆனுல இஙகே கணக்கு வழககுகளால ஆவ தென்ன? ''இம்மரம உன்னுடையதாக இருநதால - நீயும் ஆண் பிள்ளையானுல - மரததினமேல ஏறிப பழத் தைப் பறித்துச் சாப்பிடு. இலலையெனருல பெண்ணின முனதாளையில முகததை மறைததுககொணடு உறஙகு'' என்ருன் சிற்றப்பன். சரியான வாதம, நேரடியான பேசசு. இந்தச் சவாலை ஏறக ஒரு நாள குறிப்பிட்டாரகள - ''வரும் திங்கட்கிழமை மேளதாளத்துடன பழததைப பறிப்போம. மறைநதுவநது திருடுபவன கீழ மகன'' என்ருன அண்ணன மகன. நாள் நிச்சயிககபபட்டு விட்டது. இரு கட்சியினரும் ஆள திரட்டத் தொடங கினா.

இரு கட்சியினரிடம இருநதும பலதேவஸிமமனுககு அழைபபு வநதது ஆனுல பலதேவ இபபொழுது கிருஷ்ணன ஆகிவிட்டார. ''எனனிடம எவன முதலில நேரே வருகிருஞே அவனுககு உதவி செய்வேன. இநதக் கடிதம் தூது எலலாம போதா'' எனருன். அண்ணன் மகன ஒரு நாள குதிரையினமீது ஏறிப பலதேவனிடம வநதான. அவனிடம் பேசிககொண டிருககுமபொழுதே தம்பியும் வநது சோந்தான. ஆனுல அதறகுளளேயே பலதேவஸிமமன வாககுக கொடுததுவிட்டான மறு நாள் மாணுககர் குழாததுடன அவன் விஷ்ணுபுரம சென்ருன்.

இனறுதான் போா நடககவேணடும. 'சணடை சச்சரவுகளிலிருந்து தொலைவில விலகியிருததல' வேண டும ஏனெனில அநேகமாகக் குறறமறறவாகளும அவறறில் சிககிககொளளுகிருாகள, துனபுறுகிருாகள எனறு வயது சென்ற பெரியோர்கள இட்ட கட் டளையை மதியாமல ஆவலினுல நான பல திசைகளி

விருநதும விஷ்ணுபுரத்திறகு வேடிக்கை பாாகக வநத கூட்டததில கலந்துகொணடேன்.

விஷ்ணுபுரம அன்று குருக்ஷேத்திரம ஆகிவிட்டது. நடுவிலே அநத மாமரம அசையாமல பறறினறி நின்று கொணடிருநதது. இருபுறமும் இரு கட்சிகளைச சாாந தோாின கூட்டமும் கூடியிருந்தது. ஈட்டிகளின முனை கள வெயிலில் பளபளததுககொண் டிருநதன. பிககாசு கள பகலிலும சநதிரனைபபோல ஒளி வீசின. கோடாரி கள பரசுராமரை ஞாபகப்படுத்தின. தடிகள நலல பாமபுபோல பிரகாசிததன. கத்திகள் மிகக குறை வாகவே இருநதன ஏனெனில ஆஙகில அரசாஙகததின சனிபபாாவை அவறறினமீது விழுநதிருந்தது 'ஈட்டி யாலும கோடாரியாலும தாக்குகையில ஏறபடும இன பம கததியால குதததுகையில் ஏது?'' எனறு தடிகளைக கொணடு சணடை புரிவோா கூறுவா நான அவாகள பேசசுககளில எனனை மறககவிலலை. என கணகள இநத ஆயததங்களைப் பாாத்துககொண டிருநதன. இரு தரபபினரும எதிரெதிரே நினறிருநதனர். வேடிககை பாாபபோரின கூடடம இரு புறஙகளிலும நினறிருந தது. அடுத்தடுதது வெறறி முழககஙகள எழுநதன; பயமுறுததலகள கிளமபின.

''போலோ, மஹாவீர் ஸவாமி கீ ஜய!'' எனறு கூவிக கொணடே இருதரப்பு வீராகளும் மாமரததை நோககி முனனேறினா. பாாப்பவாகளின இதயம மிக வேக மாக அடிததுக்கொணடது அட, இனனும சிறிது நேரத்திறகுளளேயே இவாகளில சிலா இறநதுவிடுவார் கள், சிலா காயமுறறு வீழந்திருப்பா, ''ஐயோ!'' என் வாயிலிருந்து இவவொலி முழுவதும் வெளிப்படவிலலை; பார்ததால மூத்த சகோதரனின தரப்பில எலலோருக் கும் முனனே பலதேவஸிமமன நினறுன. அவனுககு இரணடு பக்கஙகளிலும என ஊரினரான இரணடு முக் கிய சீடர்கள. அவன தலைமீது மஙகிய நிறஙகொணட தலைபபாகை. காலகளில் அதேநிறச் செருப்பு. உடலில

அதே நிறத்தையுடைய நீணட பெரிய சட்டை. ஆனல் இடுபபிறகருகே ஒரு படடையினுல கட்டி அதன சுற் றளவைக குறைத்திருந்தான். அதனுல வேகமாகப் பாய்வதறகும குதிப்பதறகும இடையூறு இலலாமல் இருநதது. அவன கட்டியிருந்த துணியோ அநேகமாக 'அரைநிஜாரின' வேலையைச செயது வந்தது. முகம் சிவநத ஒளிவீசும் தழலாக இருநதது.

அவன முனனே நடநதான. மாமரத்தருகே சென ருன் இரணடு சீடர்களேயும நோககிச சைகை செய் தான அவர்கள உடனே மாமரததினமேலே ஏறினா. மரததின கிளேயை முரட்டுத்தனமாக வளேததுப பழங் களேக கீழே போடலாயினா. "ஆணபிள்ளே எவனுவது இருநதால வரட்டும!" எனறு பலதேவஸிமமன முழங் கினன எதிாக கட்சியினா திக்பிரமை கொணடு வேடிககை பாாப்போரைபபோல அவனேப பாாததுக கொணடே நினறனா. பலதேவஸிமமனின அறைகூவ லால எதிாககட்சியினருககுத தமமைப பறறிய உணாவு பிறநததுபோல் இருநதது. பிறகு சொலலவானேன, இரு கடசிகளுககும சணடை தொடஙகிவிடடது. தடிகளின மோதல, பிகசாசுகளின முழககம, ஈடடிகளின உராயவு இவறறுல வாயுமணடலமே நிரமபிவிடடது. வெறறி முழககஙகளுடன, 'ஐயோ, ஐயோ!' எனற குரலகளும எழுநதன ஒருவனுடைய தலேமீது தடியடி விழுநதது. அவனுடைய மணடை பிளந்து, இரணடு துணடுகள ஆகிவிடடது! அவன கீழே வீழநதான. ரததம பெருக் கெடுதது ஓடியது. ஒருவனுடைய வயிறறில ஈடடி புகுநதது ஈடடியின முனேயுடனேயே அவனுடைய குடலும வெளியே வந்துவிட்டது. குடலே இரணடு கைகளாலும் பிடித்துக்கொணடே அவன குபபுற வீழந் தான ஒரு நிமிஷததுக்கு முன்னே எநதக் கை, தடியைச் சுறறிககொண டிருநததோ அந்தக் கையைப் பிக்காசின் ஒரே அடி உடலிலிருந்து பிரித்துவிட்டது. அந்தக் கை ரத்ததத்திலை பூசப்பட்டு, பூமியின்மீது இப்பொழுதுங

"என்ன ஆயிற்று பைஜு?" என்று கேட்டார். ஜெயிலரின் ஆவலோடு இரக்கமும் கலந்திருந்தது பைஜு மாமாவின் கண்ணீர் பெருக்கும் பின்னும் அதிக மாகியது. "அந்தோ எஜமான்! எண்ணெயும் வாணலி யும் உள்ளே சென்றுகொண்டிருக்கையில் நான் வெளியே போய்க்கொண்டிருக்கிறேன் நல்ல விழா நாளில் வெளி யேற்றி விட்டீர்களே!" அவரால் மேலே பேச முடிய வில்லை. ஜெயிலர் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்து விட்டார் தம் சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாயை எடுத்துப் பைஜுமாமாவிடம் கொடுத்துக்கொண்டே, "கடைத்தெருவுக்குச் சென்று இந்தப் பணத்திற்குப் 'பூவா' வாங்கிச் சாப்பிடு" என்று கூறினார் ஆனால் பைஜுமாமாவுக்கு அந்த வெள்ளிப் பணத்தின் மீது சிறிதும் மோகம் விழவில்லை. ரூபாயை எடுத்து ஜெயில ரின் காலருகே வைத்துவிட்டு, இன்னும் ஒரு நாளைக்கு மட்டும் தம்மைச் சிறையில் வைத்திருக்குமாறு வேண்டிக் கொண்டார். ஜெயிலர் இது தம்மால் முடியாத காரியம் என்று சொல்லிவிட்டார் எவ்வளவு சொல்லியும் ரூபாயை எடுத்துக்கொள்ளாமல் வேட்டியின் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு பைஜுமாமா வெளியே சென்றுவிட்டார்.

வெளியில் எங்கும் ஹோலிப்பண்டிகையின் ஆர்ப் பாட்டம். வண்ணப் பொடிகள் பறந்தன; இன்னிசைகள் நிகழ்ந்தன. சிறையில் கிடைத்த மூன்று அணாக்களுக்கு மாவு வாங்கிப் பைஜுமாமா உண்டார். பகல் முழுவதும் இங்கும் அங்கும் திரிந்து வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தார். மாலையில் ரயில்ஸ்டேஷனில் சாமான் கிடங் கிற்கு எதிரே படுத்துக்கொண்டார். சிறிது மன அமைதி ஏற்பட்டதும் ஒரு வண்டிக்கருகே கட்டியிருந்த ஒரு ஜோடி மாடுகளை அவிழ்த்துக்கொண்டு கிளம்பிவிட்டார். வண்டிக்காரன் பகல் முழுவதும் அலைந்து திரிந்ததால் உடம்பு தெரியாது ஆழ்ந்த நித்திரையில் இருந்தான். இப்பொழுது பைஜுமாமா என்ன செய்வார்? அவரே.

''வண்டிககாரா, வண்டிக்காரா! என்ன, முட்டாள் போல் உறங்குகிருயே. திருடன் உன் மாடுகளை ஓட்டிக் கொணடு போகிருனே!'' எனறு உரககக் கூவிஞா. 'மாடு கள்' என்ற 'சொல் காதில வீழ்நததுமே வணடிககாரன் திடுககிட்டெழுநது, சததம வநத பககததை நோககி ஓடிஞன. அவன ஓடி வருவதைக கணடு பைஜூமாமா தாமும் ஓடுபவா போலப பாசாஙகு செயதாா அவரைப் பிடிததுககொணடாாகள். சில அடிகளையும வாஙகிக கொணடாா. இரவுமுழுவதும காவலில இருநதாா. விடிந்ததும் மறுபடியும சிறையில பிரசனன மாஞா

சிறை முழுவதும ''பைஜூமாமா வநதுவிட்டாா, வந்து விட்டாா'' எனறு ஒரே கூசசல ஆஞல பைஜூ மாமா வந்ததும வராததுமாக 'மேட்'டிடம சென்று ''பூவாக்கள எஙகே வைககபபட்டுளளன? கொணடு வாருஙகளேன'' எனருா. மேட நகைததாா பைஜூ மாமா அவரிடம, ''எனககாக இரணடொரு பூவாககளைத் திருடி வைததிருகக வேணடும, நாளைககு நிசசயமாக நான் வநதுவிடுவேன'' எனறு சொலலிவிட்டுப போயி ருநதார். பைஜூமாமா 'நிசசயம' எனற சொலலை உணமையாகவே பொருளுளளதாகச செயதுவிடுவாா எனறு மேட் நினைககககூடவிலலை. ''பூவா ஏது?'' எனறு மேட் சொனனதும பைஜூமாமாவின கணகளில நீா அருவியாகப் பெருகியது. ''அநதோ! அந்தப் பூவாவுக் காக நேறறு இரவு அநத வணடிககாரன கொடுதத எத்தனை அடிகளைத தாங்கிககொணடேன. இரவு முழு வதும் காவலில பூவாவைப பறறியே கஞக கணடுகொண டிருநதேன. தமபி, எனன அதிருஷடமபபா என அதிருஷடம'' எனறு அஙகலாய்ததாா. இதைக கணட 'மேட்'டின கணகளும் நீரைப பெருககின. தனக்காகத திருடி மிகுத்து வைத்திருந்த பூவாககளை எடுததுக் கொணடு வந்து பைஜூமாமாவின் எதிரே வைததான. ஊசிப்போயக் கலபோனறு இறுகிப்பேன அநதப் பூவா வைப் பைஜூமாமா சுவைத்துச சுவைத்துச் சாப்பிட்டுக்

கொண்டிருந்தார். அவருடைய கண்ணீரினுல் அவை நனைந்து மெதுவாக ஆகிவிட்டன.

இம்முறை அவர் சிறைககு வந்த வகையும பரிதாபததிற்கு உரியதுதான. இதயததைத உருககும் நிகழச்சி அது.

இநதத தடவை சிறையிலிருநது வெளியேறியதும எப்படியாவது முபபது ரூபாய சமபாதிதது ஒரு பசுவை வாஙகிககொணடுதான தம அணணன மகனிடம செல வது என்று உறுதி பூணடார பசுவின கயிறறைப் பிடித்துககொணடு முபபது வருஷஙகளுககுப் பிறகு அவா தம ஊருககுள நுழையுமபொழுது அநத ஊா எவவாறு காணபபடும? மககள தமமை அறிநதுகொள வாாகளா, எவவாறு தமமைபபறறிச சொலலிக்கொள் வது என்பது போனற கறபனைகளில் மூழகியவாறே அவா சிறையிலிருநது வெளியே அடியெடுதது வைத் தார்.

இமமுறை அதிருஷ்டம அவா பககத்தில இருபப தாக முதலில தோனறியது மேலும் அபாயததுக்கு உடபடச சநதாபபமே இமமுறை ஏறபடவிலலை. அதனுல முபபது ரூபாயககாகச சிறு திருட்டுககள் புரியத் தொடஙகினுா ஒரு ஹோடடலிலிருந்து இரணடு லோடடாககளைத திருடி இரணடு ரூபாய் களுககு விறருா. ஒரு கோயிலிலிருந்து இரணடு கமபளிகளை அடிதது வநதாா. மூனறு ரூபாயகள அவற றுல கிடைததன. ஒரு வககீலின வீட்டிலிருநது ஒரு போாவையைக கொணடுவநதாா. நானகு ரூபாய்கள் கிடைத்தன. எலலாவறறையும்விட மிகப பெரிய வேட்டை கிடங்கிலிருந்து ஒரு மூடடை மிளகாய் திருடி யதுதான். இதனுல் அவருக்கு ரொக்கமாகப் பன்னிரண்டு ரூபாய் கிடைததது இபபொழுது பைஜூமாமாவிடம் இருபத்தொரு ரூபாய்கள இருநதன ஒன்பது ரூபாய் களே குறைவு. மிளகாயத் திருடடுத்தான் எலலாவற்றி லும் நலல திருட்டு. ஒரு நாள் நகரத்துக்கு வெளியே

காலேக்கடன கழிககச் சென றபோது வயலகளில் மிளகாய் காய்த்திருப்பதைப் பார்த்தார பட்டணத்துத் திருடடில என்றைககு அகபபடடுககொளளவோமென்று யாா கணடார்கள்.' இரவு நேரஙகளில் மிளகாயத தோடடத்தில புகுநது கொஞசங கொஞசம மிளகாயைப பறிதது ஏன விறககககூடாது? இதறகு பததுப பனனிரணடு நாடகள் பிடிககும ஆனுல இதில அபாயம இல்லே யலலவா? இவவாறு யோசிதது ஒவவொரு இரவும வயலுககுச சென்று ஒரு சுமை மிளகாய கொணடு வருவாா. அதைக கடைத்தெருவில ஒரு விவசாயிபோல விறறு விடுவார்! கொஞ்சங் கொஞசமாக அவரிடம இருபததாறு ரூபாய்கள சோநதுவிட்டன. நானகு ரூபாயகளே குறைவாக இருநதன. ஆம நானகே ரூபாயகள!

வழியின முடிவில் வழிபபோககனின கால்கள வேகமாகச் செல்லத தொடஙகுகினறன. அவன நடையில ஒரு வேகம் காணபபடுகிறது. ஒருநாள பைஜாமாமா நிறைய மிளகாய்களேக கொணடுவந்தார். அதனுல ஒனறேகால ரூபாய் கிடைத்தது இப்பொழுது மூனறு ரூபாய்களே குறைவு. மூனறு—அந்தோ, மூனறு என்பது எத்தனே துரதிருஷடம பிடிதத எணணிககை! அனறு இரவு மாமா வயலுககுச் சென றதும அவரைச் சூழந்து கொணடுவிட்டனர் அவவேழைக் குடியானவாகள எப்படித திருடடுப போகிறதென்று அறியாமல சில நாட்களாகத திகைத்திருந்தனா. அவாகளுடைய வயலகள அழிநதுவநதன. பல நாடகளாகவே அவாகள தேடிக்கொண டிருந்தனா. இன்று திருடனேயும தம கணணுல் கணடுவிடடனா. திருடனே நோககி ஓடினா. மாமா எவவாறு ஓடுவாா? ஒரு தந்திரம தோனறியது. பறித்த மிளகாய்களேயெலலாம் அங்கும இங்கும இறைத்துவிடடு, காலேக்கடன் கழிபபவரைபபோல உட்கார்ந்துவிட்டார். நாறபுறங்களிலும மனிதர்கள். அவர் பேசவே இல்லே. 'எழுநதிருககிருயா, உதை வேண்டுமா?' என்ருன் ஒருவன்.

மாமா எழுந்து நின்ருர். அப்பொழுதுதான் எழுந்திருப்பவர்போல துணியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு நின்ருர். 'தப்பிவிட்டேன' என்று மனத்துக்குள நினைத்த அக்கணத்தில அவ்வயல பக்கமாகச் செல்லும் ரஸதாவில ஒரு மோட்டார் சென்றது. மிகப் பிரகாசமான விளக்கின வெளிச்சத்தில் அவரருகே, சிதறிககிடநத மிளகாயகள காணப்பட்டன. ''பாபூ, அச்சததிலை நான் அங்கேயே சிறுநீர் கழித்துவிடவில்லை'' என்று என்னிடம் மாமா சிரிததுககொணடே சொனனுர. பிறகு எனன? திருட்டுக கணடுபிடிக்கப்பட்டுவிட்டது. திருமபவுமபோலீஸ் ஸடேஷன, திருமபவும 'லாக்-அப்', அதே சிறை, அதே மாஜிஸடரேட கோாட்—

ஆனுல இம்முறை ஒரு சிறப்பு. போலீஸாா, மாமா ஒரு பழைய கைதி என்று எப்படியோ கண்டுபிடித்துவிட்டனா. அதனுல அவரை ஸெஷனஸுக்கு அனுப்ப ஏற்பாடுகள் செயதாாகள. வாலிப மாஜிஸட்ரேட் போலீஸின் வாதத்தை ஒப்புககொணடாா. இனஸபெகடர், ''கிழவா, இமமுறை ஐந்தாணடுகள நீ கலலுடைக்க வேணடியதுதான'' என்று திட்டிககொணடே கூறிஞா.

ஸெஷனஸ ஐட்ஜ் கிழவாா அவர் மாமாவிடம் குறறசசாட்டைப்பற்றிக கேட்டதும மாமாவால இல்லை என்று விடையளிகக இயலவிலலை. அவா பொய் எப்படிச சொல்லமுடியும்? ஆனுல் ஒரு மனுச் செய்துகொணடாா.

''ஐயா, இருபத்தைநது ஆணடுகள வேலை செய்த பிறகு தன் சிபபநதிகளுககு அரசாஙகம் 'பென்ஷன' கொடுககிறதெனறு கேளவிபபட்டிருககிறேன். தங்களுக்கும் வயதாகிவிட்டது; இனிப் 'பென்ஷன' கிடைககும். நான் முப்பது வருஷங்கள் சிறைக்குள இருந்து சர்க்காரின் வேலையைச செய்திருககிறேன. தருமதேவதை சாட்சியாக நான் வேலையைக் குறைவாகவோ தவருகவோ செய்ததில்லை. ஜெயிலரைக் கூப்பிட்டுக் கேளுங்கள்; ஜமேதாரை அழைத்துக் கேளுங்கள். பைஜூ வேலை

செய்யாமல் உண்ணமாட்டான் ஐயா: முப்பது வருஷக் கடும் உழைப்பிற்குப் பிறகு இக்கிழவனுக்குப் பென்ஷன் வாங்கும் உரிமை இல்லையா ஐயா? தங்களுக்குப் புண்ணிய மாகப் போகட்டும. தங்கள் தாய் தந்தையருக்குப் புண்ணியமாகப் போகட்டும். தாங்கள நீதி வழங்குங்கள். தங்களிடமிருநதுகூட நியாயம கிடைக்கவிலலையாயின் இக்கிழவன் வேறு எங்கே செல்வான?'' எனறூர்.

இது ஒரு புதுமையான வாதமாக இருந்தது. ஆனல இவவாதம் இதயத்தைத் தொடுமே தவிர, அறிவை இது எனன செயயககூடும்? ஐடஜ சட்ட புத்த கத்திற்குக் கட்டுபபட்டவா. அசசட்ட புததகத்தினபடி தண்டிப்பதற்கு அவசியமான தடையஙகள தேவை. அவையனைத்தும் இங்கிருந்தன. நேரான சாட்சியங களும் குற்றத்தை ஒப்புககொணடு கொடுத்த வாககு மூலமும் இருந்தன. குறறம ஏன செயயப்பட்டது? அதில் சமூகம எவவளவு தூரம் குற்றவாளி? குற்றம செய்தவனுககு இதில் எவவளவு தூரம் பொறுப்பு? அவனு டைய செயலில் சூழ்நிலைக்கு எவ்வளவு பஙகு?—இவற்றை யெல்லாம் கவனிககச சடடப்புததகம் எவவளவு தூரம ஜட்ஜுக்கு உரிமை தரும்? மனிதனின் உளளே இருககும மனிதப் பண்பை வெளிவர அநுமதிததலும், குறறவாளி யைச் சரியான வழியில செலுதத உதவுவதறகு எண்ண லும் சட்டப்புத்தகததினபடி துரோகச் செயலகளாகக் கருதப்படுகினறன. ஜட்ஜ் வயதானவர், பிறர் இன்ப துன்பங்களை உணர்பவர். ஆனலும் சட்டப்புத்தகம அவருக்குச் சாப்பாடு போட்டுக்கொண் டிருந்தது முதுமையைச் சுகமாகக் கழிக்க உதவிக்கொண் டிருநதது. பாவம்! அச்சட்டத்தை எவ்வாறு அவர் கவனியாதிருக்க இயலும்? ஆம், அவர் ஷேக்ஸ்பியரின 'வெனிஸ் வர்த்த கன்' நாடகத்தைப் படித்தவர்தாம். அதனல அவர் இம் முறை தம் நீதியின்மேல் இரக்கத்தின் நிழல் படிவதைத் தடுக்க முடியவில்லை. இத்தடவை மாமாவுக்கு ஒரு வருஷத் தண்டனை மட்டுமே கிடைத்தது!

## ஸுபான்கான்

''உங்கள் அல்லா மேற்கேதான இருக்கிருரா? அவர் ஏன கிழக்கே இலலே?'' எனறு நீணடு, வெணமையாகப் பளபளபபதும அசசததைத தருவதுமாகிய ஸுபான்கானின தாடியில் எனனுடைய சிறு விரலகளேப் புகவிட்டுககொணடே நான் கேடடேன. அகனறு மேலெழுநதருககும அவரது நெறறியில மகிழசசிக கோடுகள தெனபடடன அடாந்த தாடி மீசைகளுககுள மறைநது கிடந்த மெலலிய உதடுகளில புனசிரிபபுத் தலேகாட்டியது. தமது நீணட இடககையை என தலேமீது வைத்துத தடவிககொணடே அவர், ''இலலே, குழநதாய! அலலா கிழககு, மேற்கு, வடக்கு, தெறகு எஙகுமே இருக்கிருர்'' என்ருா.

''அபபடியானுல நீங்கள் ஏன் மேறகு முகமாக நோககிக்கொணடே தொழுகை நடதது கிறீர்கள்?''

''மேறகில் உளள ராஜயத்தில தேவதூதர் அவதாரம செய்தார். அவா அவதரிதத இடததில் எஙகள தீர்த்தங்கள் உளளன நாஙகள அத்தீர்த்தங்களே நோக்கி நின்று அல்லாவை நினேககிறேம்.''

''அததீாததஙகள இங்கிருந்து எவவளவு தூரததில் உளளன?''

''வெகு தூரத்தில ''

''சூரிய பகவான மறையும் இடத்திலா?''

''இல்லே, அதறகுச சிறிது முனனுலேயே.''

''நீங்கள அததீர்த்தஙகளுக்கெல்லாம் சென்றிருக்கிறீர்களா, ஸுபான தாத்தா?''

ஸுபான் தாதாவின் பெரிய கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதைப் பார்த்தேன். அவர் முகம் முழுவதும் சிவந்துவிட்டது. எண்ணச் செறிவால் குரல் தழு

தழுத்தது. ''அங்கே போவதென்றால் மிகச் செலவா கின்றது குழந்தாய்! நான் ஏழையல்லவா? அந்தப் புனித க்ஷேத்திரத்திற்கு யாத்திரை செய்துவிட்டு வரவேண் டும்; அதற்காகக் கொஞ்சம் பணம் சம்பாதிக்கவேண்டும் எனபதற்காக இந்த முதிர்ந்த வயதிலும் என் சக்திக்கு மீறி வேலை செயகினறேன் அப்பா'' என்றார்.

அவருடைய கண்களைப் பார்த்து என் குழந்தை இதயங்கூட உணர்ச்சியினால் நிரம்பியது. ''என் மாமா விடமிருந்து ஏன் கொஞ்சம கடன் வாங்கிக்கொள்ளக் கூடாது?'' என்று நான் அவரைக் கேட்டேன்.

''கடன் வாங்கிச செய்யும் தீர்த்த யாத்திரையால் புண்ணியம் கிட்டாது, குழந்தாய. அல்லா விரும்பினால் இரணடோராண்டுகளில் நான் அங்கே செல்லக்கூடிய அளவுக்குப் பணம் சேர்ந்துவிடும்.''

''அங்கிருந்து எனக்குககூடச் சில பரிசுப் பொருள் கள் வாங்கிக்கொண்டு வருவீர்க ளல்லவா?''

''அங்கிருந்து வருபவா பச்சைக் கர்ஜூரிப்பழங் களையும் காய்நத கர்ஜூரிகளையும் கொண்டுவரு வார்கள.''

''ஆம், ஆம, எனக்குக் காய்ந்த பழங்களையே கொண்டுவாருங்கள. ஆனால், ஒரு டஜனுக்குக குறைந்து வாஙகிககொள்ளமாட்டேன்; ஆமாம்!''

ஸுபான் தாத்தாவின் வெணமையான தாடி மீசை களுக்கிடையே அவருடைய வெணபற்கள ஒளிர்ந்து கொண்டிருந்தன. சிறிது நேரம்வரை என்னைச் சீராட்டிக கொணடிருந்தார். பிறகு, ''நல்லது, போய் விளையா டப்பா, நானும் என் வேலையை முடிக்கிறேன். கூலிக் குத் தகுந்த வேலை செய்யாவிடில் அலலா கோபங்கொள வார்'' என்றார்.

''உங்கள் அல்லா மிகவும் கோபக்காரரா என்ன?'' என்று நான் சிறிது கோபத்துடன் கேட்டேன்.

இதைக் கேட்ட ஸுபான்தாதா பெரிதாக நகைத் தார். மற்றும் ஒருமுறை என் தலையின்மீது கையால்

தடவிக் கொடுத்தார்: "குழந்தைகளிடம் அவருக்கு மிக்க அன்பு உண்டப்பா. அவர் உனக்கு நீண்ட ஆயுளைத் தரட்டும்" என்று சொல்லி என்னைத் தம் தோளின்மீது தூக்கிக்கொண்டார். தூக்கியவாறே சுவரருகே வந்து அங்கே என்னை இறக்கிவிட்டார். உடனே தமது கரணை முதலியவற்றை எடுத்துக்கொண்டு வேலையில் இறங்கி விட்டார்.

ஸுபானகான கைதேர்ந்த கொல்லத்து வேலைக்காரர். வீட்டுச் சுவர்களைச் சிறிது பழுது பார்க்கவேண்டிய அவசியம் ஏற்படும்பொழுதெல்லாம் அவரைக் கூப்பிடுவார்கள். அப்போது வருவார்; ஐந்தாறு நாட்கள் இங்கே தங்குவார்; வேலையை முடித்துவிட்டுச் செல்வார்.

அவர் நல்ல உயரம்; அதற்குத் தகுந்த பருமன். அகன்ற நெற்றி. ரோமங்கள் அடர்ந்து சற்றே மேலெழுந்த பெரிய புருவங்கள். கடைக்கண்களில் சிறிது சிவப்பு கண்களின் மணிகளில் சிறிது நீலநிறத்தின் ஒளி. எவருக்கும் இராத மிகக் கூரிய நாசி. அடர்ந்த தாடி மார்பு வரையில் அது நீண்டிருந்தது. அம்மார்பு இம் முதுமையிலும் அகன்று பரந்திருந்தது. தலையில் எப்பொழுதும் இருமடிப்புள்ள தொப்பியை அணிந்திருப்பார். உடலில் அரைக்கைச் சட்டை, இடுப்பில் கச்சம் வைத்த வேஷ்டி. கால்களில் அழகிய செருப்பு. முகத்திலிருந்து ஒளி வீசும். பேச்சில் தேன் பெருகும். நல்லோர்களின் பேச்சு, நடத்தை எல்லாவற்றையும் அப்படியே கடைப்பிடிப்பவர் ஆவர்.

ஆனால் என் பிள்ளைப் பருவத்தில் எல்லாவற்றையும் விட அவரது வெண்மையாக ஒளிரும் தாடியே என்னைக் கவர்ந்தது. தொழுகையின்பொழுது இடுப்பில் பட்டை போட்ட லுங்கியைக் கட்டி, உடலில் சாதாரணச் சட்டை அணிந்துகொண்டு, மண்டியிட்டு, இரண்டு கைகளையும் மார்பிற்குச் சிறிது மேலே தூக்கி, பாதிக் கண்களை மூடிக்கொண்டு அவர் மந்திரங்களை உச்சரிக்கத்

தொடங்குகையில், நான் வியப்பில் மூழ்கியவனுக அவரையே பார்த்துக்கொணடு நின்றுவிடுவேன். 'உணமையிலேயே அவருடைய அலலா அங்கு வந்திருக கிருர்; தாத்தரீவின் ஒளிவிடுங் கணகள அவரைப் பாரத் துக்கொண் டிருக்கின்றன, இந்த உதட்டு அசைவு அவ ருடன் பேசுவதால் உண்டாவதே' எனறு எனக்குத தோன்றும்.

ஒரு நாள் இளமை முறுக்கிலை அவரை, ''ஸுபான தாத்தா, நீங்கள எப்பொழுதேனும அல்லாவைப் பார்த திருககிறீர்களா?'' எனறு கேட்டுவிட்டேன.

''எனன அப்பா இப்படிக கேட்கிருய? மனிதன இந்தக கண்களால அலலாவைக காணமுடியாதே!''

"என்னை ஏமாறறுதீரகள் தாததா, நான் எலலாவற் றையும் பார்த்துககொணடுதான இருககிறேன். நீஙகள அவரைத தினந்தோறும அரைககணணுல் காணகிறீா கள். அவரோடு கிசுகிசுவெனறு பேசுகிறீாகள. எனனை யாரென்று நினைதது ஏமாறறுகிறீாகள?"

"நான் அவரோடு பேசுவதா? எனககு அப்படிப பட்ட பேறு ஏது? தேவதூதா முகமமது மாததிரநதான அவருடன் பேசியிருககிருா, குழநதாய. அபபேசசுககளே குரானில் எழுதியிருக்கின்றன.

''நல்லது தாத்தா, உங்கள 'ரஸுல்' முகம்மது ஸாஹப்பிறகும் தாடியிருநததா?''

''ஆம், ஆம், இருநதது, மிக அழகாக நீணடு, தங்க நிறமாக இருநதது. இபபொழுதுகூட அவருடைய சில தாடி ரோமஙகள மககாவில வைககப்பட்டிருக்கினறன. நாங்கள் எஙகள் யாத்திரையில அவற்றையும் தரிசனம செய்வோம்.''

''பெரியவனுன பிறகு எனககுத் தாடி முளைததால நான் தாடி வைததுக்கொள்ளுவேன தாத்தா. மிகவும் நீண்ட தாடி.''

ஸுபான்கான் என்னைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டார். பிறகு தோளில் தூக்கிக்கொண்டு இங்கு

மங்கும் சுற்றினர். பற்பல பேச்சுக்களைப் பேசினர். கதைகள சொன்னர். எனனைச் சந்தோஷப்படுத்திவிட்டு அவர் தம் வேலையில் இறங்கிவிட்டாா. வேலையும் அல்லாவுமாகிய இரணடுந்தாம அவருக்கு உலகத்திலேயே எலலாவறறையுமவிடப் பிரியமான பொருள்கள். வேலை செய்துகொண டிருககையில் அல்லாவை மறக்கமாட் டார். அல்லாவை நினைப்பதிலிருந்து சமயங்கிடைத்தால் உடனே சட்டெனறு வேலையில இறஙகிவிடுவதைத் தம புனிதப பணியாகக் கருதினா. வேலையும் அலலாவும் இணைநத இநத ஒருமைப்பாடு அவா இருதயத்தில் அனபுக் கஙகையை ஓடச் செய்துகொண டிருந்தது. அபபிரவாகததில எனபோனற குழநதைகளும மிக்க ஆனநததுடன மூழகககூடும; அமிழ இயலும்.

ஒருநாள பாட்டி, ''காலையிலேயே குளித்துச் சாப்பிட்டு விடு இனறு நீ ஹுஸேன் ஸாஹப் விழா விறகுப போகவேணடி யிருககும ஸுபான்கான் வந்துகொணடே யிருபபாா'' எனறுள.

எத்தனையோ தெய்வங்களுககு வேணடிக்கொண்ட பிறகு என் தாய் என்னைப் பெற்றுள். வேண்டிக் கொணட தெய்வங்களுள் ஹுஸேன ஸாஹப்பும் ஒருவா. அதனுல ஒனபது வயசுவரை, உபநயனம் ஆகாதவரையில முகரததினபொழுது முஸ்லிம் சிறுவர் களைப்போல நானும் 'தாஜியா'வின நாறபுறங்களிலும், வாணம பூசப்படட தடியை எடுத்துககொண்டு குதிக்க வேணடி யிருந்தது. கழுத்தில் தாயத்து அணியவேண்டி யிருநதது. அந்நாட்களில் முகரம் எனக்கு எவ்வளவு மகிழச்சி தரும நாளாக இருநதது தெரியுமா? புது ஆடை களை அணிவேன்; ஆடுவேன், குதிப்பேன்; புதுபபுது முகங்களையும் பற்பல வகையான விளையாட்டுககளையும் காண்பேன். இத்தகைய ஆரவாரத்தில் எப்படியோ நான்கு யாமங்கள் கழிந்துவிடும். இந்த முகரத்தில மயிர்க்குச் செறியச் செய்து, இதயத்தை உருககி, அவலச்சுவை நிரம்பி இரக்கத்தை உண்டாக்கும்

நிகழ்ச்சி மறைந்திருககிறதே, அதைப்பற்றிய நினைவு தான் அந்நாட்களில் எங்கே வந்தது?

நிற்க, நான் நீராடி, ஆடையணிந்து, ஸுபானகானை எதிர்பார்த்துக்கொணடே இருந்தேன; அவா வந்துவிட்டார். என்னைத் தோளில சுமந்துகொணடு தம ஊருக்குச் சென்றார்.

அவா வீடு, குழநதைகளுககு விளையாடும் இடம் ஆகிவிட்டிருந்தது. பேரன பேததிகள அவர் வீட்டில் நிரம்பியிருந்தனர் என் வயதுடைய பல குழந்தைகள் வண்ணத்துணிகளால அலஙகாரம் செய்துகொண டிருந்தனர். எல்லோருமே என் வரவைத்தான் எதிர்பார்த்துக் கொண டிருந்தனாபோலுமே! நான அங்கே சென்றதுமே ஸுபான்தாத்தாவின் வயது சென்ற மனைவி என கழுத்தில் ஒரு நூலமாலையைப் போட்டாள. இடுப்பில் மணியைக் கட்டினாள கையில இரணடு சிவப்புத் தடிகளைக் கொடுத்தாள். அந்தக குழந்தைகளுடன் எனனையும் அழைதது்க்கொணடு இடுகாட்டுப்பககம சென்றாள. நாள் முழுவதும ஓடினேன், குதிததேன், வேடிக்கை பார்த்தேன; மிட்டாயகள தின்றேன, மாலையில் ஸுபான்தாத்தாவின் தோளினமீது சவாரி செய்து கொண்டு வீட்டுக்கு வந்து சோந்தேன்.

பகரீத பண்டிகையில ஸுபானதாததா எங்களை மறக்கமுடியாது. ஹோலி, தீபாவளிப் பண்டிகைகளில் நாஙகள அவரை மறகக இயலாது. ஹோலித திருநாளில் பாட்டி தன கைகளால 'பூவா', 'கீர்', மாமிசம் இவைகளைப் பரிமாறி ஸுபான்தாததாவை உண்ணச் செய்வாள். நான் என் கைகளால் கந்தப்பொடியை எடுத்து அவர் தாடியில் பூசுவேன. ஒருமுறை அவர் தாடிககு வர்ணம் பூசியதும், நான, "ஸுபான்தாத்தா, நபி அவாகளின் தாடியும இம்மாதிரி வர்ணமுள்ளதாகத்தானே இருந்திருக்குமா?" எனறு கேட்டேன்.

"அவர் தாடிக்கு அல்லாவே வாணங் கொடுத்திருந்தார் குழந்தாய். அல்லாவுக்கு அவர்மீது மிகுந்த கருணை;

அவரைப்போன்ற பாக்கியம் நம்போன்ற சாதாரண மனிதர்களுக்கு ஏது?'' என்று கூறிவிட்டு அவர் சட்டென்று கண்களை மூடிக்கொண்டு ஏதோ முணுமுணுக்கத் தொடங்கினார். தியானத்தில் நபி அவர்களையே காண்பவர்போலத் தோன்றியது.

நான் சற்றே பெரியவனானேன். தாத்தாவும் கடைசியில் ஹஜ் யாத்திரை செய்துவிட்டுத்தான் திரும்பினார். நான் இப்பொழுது பெரியவன் ஆகிவிட்டேன், ஆனால் அவர் காய்ந்த கர்ஜூரிப்பழ விஷயத்தை மறக்கவில்லை. நான் நகரத்துப் பள்ளியிலிருந்து விடுமுறைக்கு வீட்டுக்குத் திரும்பியபோது தாத்தா இந்த நிகரற்ற பொருளை வாங்கிக்கொண்டுதான் வந்தார். இங்கே அவருடைய வீடும் நல்லநிலையில் இருந்தது. தாத்தாவுக்குத் தகுந்த நல்ல பிள்ளைகள். தங்கள் உழைப்பினால் போதுமான பொருள் சேர்த்துவைத்திருந்தனர். அவர்களிடத்தில் அதே பணிவும் நற்பண்புகளும் இருந்தன. வந்தார்; முன்போலவே மரியாதையாக இருந்தார். பிறகு கர்ஜூரிப் பழத்தை எடுத்து என் கையில் வைத்து, ''குழந்தாய், இதை உங்களுக்காக அரேபியாவிலிருந்து கொண்டுவந்திருக்கிறேன்; ஞாபகம் இருக்கிறதா? நீங்கள் இதைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டிருந்தீர்கள்?'' என்று கூறினார். அவருடைய உதடுகள் மகிழ்ச்சியால் துடித்துக்கொண்டிருந்தன.

அதை வாங்கிக்கொண்டேன்; தலை வணங்கினேன்; இன்று மறுபடியும் நான் குழந்தையாகவேண்டும், அவருடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவருடைய வெண்மையான தாடியில் விரல்களை நுழைத்துக்கொண்டு, அவரை, 'தாத்தா, தாத்தா'' என்று அழைக்கவேண்டும் என்ற ஆசை தோன்றியது. ஆனால் நான் இப்பொழுது குழந்தையாக முடியாது. வாலிபப் பருவத்தில் கபடமில்லாத குழந்தை உள்ளமும் புனிதத்தன்மையும் இருக்கவில்லை. ஆங்கிலப்பள்ளியின் சூழ்நிலை இயல்புக்கு மாறான விசித்திர நிலையை ஒவ்வொரு விஷயத்திலும்

உண்டாக்கியிருந்தது. ஆனால், ஒரு பொருள் மட்டும் இன்னும் தூய்மையாகவே இருந்தது. அதுதான் கண. கண்கள் நீரைத் ததும்பச்செய்து தமமைத் தூய்மைப் படுத்திக்கொண்டு மௌனமாக அவா பாதங்களில் சிரத்தையுடன்கூடிய வணக்கத்தைச் சமர்ப்பித்தன.

ஹஜ்யாத்திரை செயது திரும்பியபிறகு ஸுபான் தாத்தா தொழுகையிலேயே தம பொழுதில பெரும் பகுதியைக கழிததார். நாள் முழுவதும கையில் ஜப மாலை உருளும அவரது வாய் அல்லாவின நாமத்தை ஜபிததுககொணடே இருககும, அப்பேட்டை முழு வதும அவரது முதுமைககு மதிபபு இருந்தது. பெரிய பெரிய சணடை சசசரவுகளில வெகுதூரத்திலிருநது ஹிந்துக்களும் முஸலிமகளும அவரிடம வநது பஞ்சாயத் துச செய்துவைகக வேணடுவாரகள. அவருடைய நாண யத்திலும நேரமையிலும அவர்களுககு நமபிககை இருந்தது.

ஸுபானதாத்தாவின மனததில, மசூதி கட்டவேண் டும் எனற ஓா ஆசை இருநதுவந்தது என மாமா வீட்டை அவரேதான் கட்டினார். அனறு அவர் சாதாரண மேஸ்திரிதான். ஆனால, ''அல்லா விரும்பினால் நானும் ஒரு மசூதி அவசியம கட்டுவேன'' எனறு அப்பொழுதெல்லாம் சொல்வார்.

அல்லாவும் திருவுளளம கொண்டார். அந்த நாளும் வந்தது. அவரது மசூதியும் தயாராயிற்று. கிராமத்துக் குத் தகுந்த சிறிய மசூதி - மிகவும் அழகியது. தாததா தமது வாழநாள முழுவதும கற்றுத தோந்த கைத்திறனை இதில் காட்டிவிட்டாா. தாமே கரணையைப் பிடிதது வேலைசெய்யும் அளவிற்கு அவருக்கு இப்பொழுது சகதி இருக்கவில்லை. ஆனாலும், நாள்முழுவதும் ஓரிடத்தில் உட்கார்ந்தவாறே ஒவ்வொரு கல்லையும் சரியாகப பொருத்துவதில் கவனம் செலுத்துவாா. அககலலில் செதுக்கப்படும் செடிகொடிகளின உருவக்கோடுகளை

அவரே வரைவார். அவற்றைச் செதுககுவதெலலாம் அவருடைய நேர மேற்பார்வையிலேயே நடக்கும்.

என்னுடைய மாமாவின் தோட்டத்தில் கட்டடத்திற்கு உபயோகப்படக்கூடிய தேககு, கருங்காலி முதலிய மரங்கள நிறைய இருந்தன. மசூதிககு வேணடிய மரங்களெல்லாம் எங்கள் தோட்டததிலிருநதே சென்றன.

மசூதி கட்டி முடிநத அன்று ஸுபானதாததா ஊரிலிருநத அனைவருககும அழைப்பு அனுப்பினார். அன்று வெள்ளிககிழமை. அஙகிருந்த முஸலிம்களெலலோரும் அமமசூதியிலேயே தொழுகை நடத்தினர். வந்த ஹிநதுக்களை உபசரிபபதறகாகத தாததா, ஹிநது சமையலகாரர்களை வைதது, விதவிதமான தினபணடங்களைச செய்விததார். தாமபூலம கொடுகக ஏறபாடு செயதார். மசூதியின திறப்புவிழாவனறு தாத்தா விருநதினர்களுககுச செயத உபசாரததை இனறுகூட மக்கள மறக்கவிலலை.

*　　　*　　　*

காலம மாறிவிட்டது. நான் இப்பொழுது பெரும்பாலும பட்டணததிலேயே இருந்துகொண டிருந்தேன். பட்டணம் இககாலததில ஹிந்து முஸ்லிம சசசரவுகளுககு நிலைககளம் ஆகிவிட்டது. ஆம் இநநாட்களில்தான. பாருங்கள, ஹிந்துக்களும முஸ்லிமகளும் ஒரே ரஸதாவில் செல்லுகிறார்கள். ஒரே கடையில் சாமான் வாங்குகிறார்கள். ஒரு வண்டியில் ஒருவர் மடிமீது ஒருவர் உட்கார்நது போகிறார்கள். ஒரே பளளிக்கூடத்தில படிககிறார்கள், ஒரே கசசேரியில் வேலை பார்க்கிறார்கள். இருநதாறபோல் இருந்து எல்லோருக்கும் ரததவெறி பிடிததுவிடுகிறது. சணடைசசசரவு, அடிதடி, கொலை கொள்ளை, நெருப்பு வைததல் எல்லாத தொலலைகளும் கிளம்புகின்றன. வீடு பத்திரமில்லை; உடலுககுப் பாதுகாப்பில்லை, மானம் மரியாதை விடைபெற்றுவிடும். அனபு, சகோதரததுவம், பிறர்நலம் பேணல் இவற்றுக்

குப் பதிலாக வெறுப்பு, பகைமை, கொடூரமான கொலை இவையே நடமாடும்.

நகரங்களில் உள்ள இந்நோய் மெதுவாகக் கிராமங் களிலும் நுழையத் தொடங்கிவிட்டது. பசு, வாத்தியம இவைகளைச் சாக்கிட்டுத் தகராறு எழ ஆரம்பிததது. தம் ஆயுள் முழுவதும் கசாப்புக கடைக்கே தமது பசுக்களை விற்றுக்கொண் டிருந்தவர், திடீரெனறு ஒரு நாளில் யாரோ ஒரு பசுவைக் கொனறதாகக் கேள்விப் பட்டு எத்தனையோ மனிதர்களின் கழுத்தை வெட்டத தயாராயினர். கலயாணம், பண்டிகைகள முதலிய வற்றை வாத்தியம் இல்லாமல் நடத்தாதவா - முகா ரத்தின துக்கங் கொண்டாடும் நாட்களிலுமெ வாத்திய முழக்கம செய்துகொண் டிருபபவர்—இனறு தமது மசூதிக்கெதிரே ஒரு கணநேரம் வாததியம் வாசிததாலும இரதத ஆற்றைப் பெருக்கத் துடிததனா

பண்டிதர்களால சில ஏறபட்டன முலலாககளால சில தூணடிவிடப்பட்டன. ஒற்றுமை எனற பெயரில சச்சரவிறகும் கலகத்திற்கும் விதைகள் தூவப்படடன தடிகள் சுழன்றன. கத்திகள் பளபளததன. மணடைகள உடைநதன. குடல்கள் சரிந்தன. எததனை வாலிபாகள மாண்டனர்! எத்தனை வீடுகள் அழிந்தன! மிஞ்சியிருந்த வயலும் காணிகளும் பின்னல் கச்சேரிச் செலவுக்காக ஜப்தி செய்யப்பட்டன. ஸுபான் தாத்தாவின் ஊரில முஸலமான்களும் இந்த வருஷம தியாகம் செயயப போகிருர்கள என்று ஒரு செய்தி பரவியது. ஊரில முஸல்மான்கள் குறைவாகவே இருந்தனர். ஆனல அவர்கள் வெறியை என்னவென்று சொல்ல! ஹிந்துக களுக்குக் கோமாதாவிடம் உளள பக்தியைவிடத் தங்கள எண்ணிக்கையில் கர்வம் மிகுந்திருந்தது. இரு கட்சிகளி லும் சூடேறிக்கொண் டிருந்தது. ஸுபான்கானின மசூதியில் பசுக் கொலை நடைபெறப் போகிறதென்று வதந்தி பரவியது.

''ஆ, ஸுபானகானின் மசூதியில பசுக் கொலையா? இல்லை. அப்படி நடக்க முடியாது.''

''அப்படி நடந்தால என்ன ஆகும்? நமது மூக்கு உடையும; அவமானப்படுவோம. உலகம் என்ன சொல்லும்?—இத்தனை ஹிந்துக்கள் இருக்கையில் கோமாதாவின கழுததில கததியா?''

''கோமாதாவைக காகக வேண்டுமாயின*கௌராகௌரிக கசாபபுக்கடையை நாம் தாக்க வேண்டும். உண்மையில உடம்பில உணாசசி இருககுமாயின முஜபபாபூர் செலலுவோம; ஆஙகிலச் சேனைகளின படைவீட்டைத் தாக்குவோம படைவீட்டில பெரிய இளம மாடுகளே வெடடபபடுகினறன ''

''ஆனால அவை நம கணணுககு மறைவாக நடைபெறுகின்றன ''

''மனனியுங்களா, தொலைவு, அருகு என்கிற பேச்சுககே இடமிலலை. துணிவையும பலததையும் பொறுத்த விஷயம இது படைகளா தஙகியிருககும் இடததிற்குச் சென்றால துப்பாககிக குணடுகளுககு இரையாக வேணடியிருககுமே அதனால அஙகே நீங்களா செலவதிலலை. இங்கு முஸலிமகளா மிகக் குறைவாக இருக்கிறார்களா. அதனால் அவாகளைத தாகக வெறிகொணடிருக்கிறீர்கள்.''

''தாங்களா ஸுபானகானை ஆதரிககிறீாகளா; நட்புப் பாராட்டுகிறீர்களா. மததைவிட நட்பு உயர்நததன்று.''

சில வாலிபாகளுககு என மாமாவின் பேச்சுப் பிடிக்கவிலலை. அவரைத் திட்டிக்கொணடே அங்கிருந்து எழுந்து சென்றுவிட்டனர். எவ்வளவுதான் கோபப் பட்டாலும, கூச்சல் போட்டாலும் ஒரு விஷயம் மட்டும் நிசசயம்-மாமாவின் சம்மதமின்றி எவருக்கும எத்தகைய பெரிய செயலிலும் இறங்கத் துணிவு உண்டாகாது. அங்கே ஸுபான் தாததாவின் வீட்டிலும் முஸல்மான்கள்

---

*வெள்ளையா இருககும இடததின பெயர்.

கூடினர். தாத்தாவுக்கு எங்கிருந்துதான அத்தனை ஆவே சம் வந்ததோ, அவா சீறி விழுநதுகொணடிருந்தார்.

''பசுவதை நடக்க முடியாது. இப் பைத்தியக்காரப் பேச்சுக்களைக் கேட்க நான சித்தமாயிலலை நீஙகள என் எதிரே நிற்காதீர்கள.''

''ஏன் நடக்க முடியாது? நமமுடைய மதத்தை நாம பயமுறுத்தலுககுப் பணிந்து விட்டு விடுவதா?''

''நான் சொலலுகிறேன. அது மதமனறு. நான் 'ஹஜ்' யாத்திரை செய்து வநதிருககிறவன, குரஆன ஓதியிருக்கிறேன். பசுக்கொலை அவசியமான காரியம அல்ல. அரேபியாவில மககள, ஒடடகம முதலியவற றைததான பலியிடுகினறனா.''

நாம பசுபபலி கொடுத்தால் தடுப்பவா யாா! நம முடைய மதவிஷயததில அவாகள ஏன தலையிடவேணடும்?

''அவாகளைப் பறறி அவாகளிடம கேட்டுககொள நான் ஒரு முஸ்லிம். எப்பொழுதும அலலாவை மறந்த திலலை. நான ஒரு முஸலிம என்ற உரிமையுடன கூறு கிறேன, நீங்கள் பசுககொலை செயய விடமாட்டேன்; நிச்சயமாக விடமாட்டேன்.''

தாத்தாவின் தாடி முழுவதும் ஆடிக்கொணடிருந் தது. கோபத்தினுல முகம சிவந்தது. உதடுகள துடித் தன. உடலே நடுங்கியது. அவருடைய நிலையைப் பார்த்து அனைவரும் வாயை மூடிக்கொண்டனர். ஆனுல் ஒரு வாலிபன்,

''தங்களுக்கு வயதாகிவிட்டது. தாங்கள் ஒன் றிலும் கலந்துகொளள வேண்டாம். நாங்கள் அந்தக் *காபிர்களைக் கவனித்துக்கொள்ளுகிறோம்.'' என்று முழங்கினன்.

தாததா கோபத்தால் உறுமினர்: ''மகனே, நாக்கை அடக்கிப் பேசு! நீ யாரைக 'காபிா' என்று சொல்லு கிருய்? என முதுமையைப் பறறி நீ ஒன்றும சொல்ல

---

*முஸலிமகள பிற மதத்தினரை இச சொல்லால் குறிப்பர்.

வேண்டாம். நான் இதோ மசூதிக்குள் செல்லுகிறேன். முதலில் என்னைக் கொலை செய்தபிறகுதான் கோவதம் நடைபெறும்'' என்றார்.

''ஸ்பான தாத்தா அதே வேகததில்' மசூதிக்குள் நுழைந்தார். தொழுகை நடத்தினார். பிறகு ஜப மாலையை எடுததுககொணடு மசூதியின வாயிற்படியில, ''என பிணததின்மீது நடநதுதான எவரும உளளே போகமுடியும'' எனறு கூறி உடகாாநதுவிடடாா. அவருடைய கணகள மூடியிருநதன. ஆனால கனனங்களின வழியாகக கணணீா அவரது தாடியை நனைததுக் கொணடு இடைவிடாமல பெருகிககொண டிருநதது. கையில ஜபமாலையின மணிகள உருணடுகொண டிருந்தன. உதடுகளிலதான சிறிது அசைவு தெரிநதது. மறறபபடி அவரது உடல முழுவதும சலவைக கலலால் செயயபபட்ட பிரதிமைபோல ஆடாது அசையாது காணப்பட்டது மசூதியின அருகே கொஞசங கொஞ்சமாகக கூட்டம கூடத் தொடஙகியது முதலில் முஸலிம்களும பிறகு ஹிநதுககளும வநதனா இபபொழுது பசுப்பலிப் பிரசசினை தாததாவின கணணீரால கழுவப் பெற்று எஙகே சென்று மறைநததோ தெரியவிலலை! அவா சாக்ஷாத் தேவதூதராகவே காணப்பட்டாா' அவருடைய ஒவவொரு மயிாக்காலிலிருந்தும் அனபும சகோதரத்துவமும எழுநது வாயுமணடலததில பரவிககொண டிருநதன.

நான இரணடு ஆணடுகள சிறையிலிருநதேன். இத்தனை நீணட காலமவரை வழிபாாத்துககொண் டிருந்து, கடைசியில எனனைச சந்திப்பதறகு என மனைவி கயா மததியசிறைககு வநதிருநதாள.

இத்தனை நாடகள பிரிவுக்குப் பின கூடியதும முதல் முதலாக அவள் என் கையில் வைத்த பொருள்கள், பட்டு, நூல முதலியவறறால் விசித்திரமாக ஆககப்பட்ட மாலைகள், சரடுகள முதலியவைகளதாம். ''இது சூரிய தேவனுடையது'' என்று ஒவ்வொன்றாக எடுததுக் காட்

டிக்கொண்டே கடைசியாக, "இது ஹுஸேன் ஸாஹப்பின் மாலை; தாங்கள் என்மீது ஆணையாக இதை அணிந்துகொண்டுதான் ஆகவேண்டும" எனறாள.

"இவைகளெலலாம் என் தாய நிறைவேறறுவதாக வேண்டிக்கொண்ட நேர்த்திக்கடனின் அடையாளங்கள். தாய் இறநதுவிட்டாள். தந்தையும போய்விட்டாா. என்மனைவி நான்கு குழந்தைகளுககுத தாயாகிவிட்டாள் ஆயினும், இவையனைததும் இனறும பாதுகாககப்பட்டு வருகின்றன. நான நாஸ்திகன எனபதை என மனைவி அறிவாள். அதனால சநதாப்பம நேருமபொழுதெலலாம் தானே இவற்றை என கழுத்தில அணிவிபபாள இனறு இந்தச் சிறையில சிறைக்காவலாகள இரகசியப் போலீஸ் காராகள் இவர்களின எதிரே அவள அவவாறு செய்ய வில்லை ஆனால ஆணையிடுவதற்கு மட்டும தயஙகவிலலை. நானும சிரிததுக்கொணடே அவள விருபபத்தை நிறை வேற்றினேன.

என் மனைவி போய்விட்டாள். ஆனால அமமாலைகள இப்பொழுதும என் பெட்டியில உளளன

நான் பெட்டியைத் திறககுமபொழுதெல்லாம் ஹுஸேன் ஸாஹப்பின மாலைகளைக காணகையில இரணடு அபூர்வமான சிததிரஙகள என கணணெதிரே நடன மாடும்.

பழங்காலத்தின முதலாவது *கர்பலாவின சித்திரம் எழுந்தது. ஒருபுறம எழுபததிரணடு போா உளளனா. அவாகளிடையே பெண்களும குழந்தைகளுங்கூட இருக் கின்றனர். இந்தச் சிறுகூட்டததின தலைவா—ஸாதார் ஹஜரத் ஹுஸைன் ஸாஹப். அவரை மதகுருவின் பதவியில் அமருமபடி பன்முறை வேணடிககொண்ட துணடு. ஆனால், இன்றோ அப்பதவியில் அமர்ததுவதற்குப் பதிலாக அவருக்கு ஒரு துளி தண்ணீர் கிடைப்பது கூட

---

*முஸ்லிம்கள முஹாரத்தின்போது 'தாஜியா'வைப புதைக்குமிடம.

அரிதாகிவிட்டது. எதிரில் புராத் நதி ஓடிக்கொண் டிருக் கிறது. ஆனாலும் அதன் ஒவ்வொரு துறையிலும் காவல் போடப்பட்டுள்ளது. அதிலிருந்து தண்ணீர் எடுக்கவிட வில்லை. தீச்செயல் புரிபவனும் வீண பிடிவாதக்காரனு மாகிய *யஜீதை மதத்தலைவனாக ஒப்புக்கொள்ளும்படி ஹஜரத் ஹுஸைனை வற்புறுத்தினார்கள். "ஒப்புக்கொள், இனறேல தாகத்தினால் துடித்துச் சா" என்று கூறினார்கள.

குழந்தைகள் தாகத்தால் அலறுகின்றனர்; அவர் களின் தாயும் சகோதரிகளும் துடிக்கின்றனா. "ஐயோ, ஒருவாய்த் தண்ணீர் கொடுங்கள்" என் தொண்டை வறண்டுபோகிறதே! அவர்கள் மூசசுத் திணறுகிறதே! தண்ணீா, தணணீர்—ஒருவாய்த் தண்ணீர்" என்று கதறு கினறனர்.

"தண்ணீர் நதியில் ஓடத்தான் ஓடுகிறது. உனக்கு மதிப்பும பணமும் வேணடிய அளவு இருக்கின்றன; உன் பணியாள் போய்க கொண்டுவருவான்; ஏனெனில் நீ தேவதூதனின் வாரிசு அலலவா? ஆனால் ஒரு நிபநதனை. யஜீதைப் பற்றிக் கவி பாடு" என்றாகள்.

"யஜீதைப்பறறிக் கவிபாடவா? கொடியோன் யஜீதை ஒப்புககொளவதா? தேவதூதரின வாரிசான நான ஒப்புககொளவதா? நடவாது. உயிரை மகிழ்ச்சி யுடன் விடுவேனே தவிரத தேவதூதரின் வாரிசாகிய நான இககீழ்மையான செயலைச் செய்யமாட்டேன்" எனறார் ஹுஸைன்.

ஆனால குழந்தைகளுக்குத் தண்ணீர் கொணடுவந்து தானே ஆகவேணடும்? அவர்களை இவவாறு உயிருடன் துடித்துச் சாகவிட முடியாதே!

ஒருபுறம் எழுபத்திரணடு பேர். அவர்களுள் பெண் களும் குழந்தைகளும் உள்ளனர். இன்னொருபுறம்

---

*யஜீத' கலீபா ஆகவேண்டுமெனறு விரும்பியவன். ஹஜரத் இமாம் ஹுஸேனைக் கர்பலாவில் கொல்வித்தவன்.

கொடியோன் யஜீதின் கணக்கற்ற ஆயுதந்தாங்கிய சேனே! சண்டை நடக்கிறது. ஹஜரத் ஹுஸேனும் அவரைச் சேர்ந்தோரும் அந்தக் கர்பலா மைதானத்தில பலியாகின்றனர் அந்தத் தியாகிகளின் இரத்தத்தால் அநத மைதானத்தின் மணல் செந்நிறம அடைகிறது. குழந்தைகளின் அலறல்களாலும் பெணகளின் கதறல களாலும் சூழ்நிலே பயங்கரமாகின்றது. இவவளவு பயங் கரமான நிகழச்சி உலகசரித்திரத்திலேயே கிடைப்ப தரிது. முகரம் அந்நாளை நினைவுபடுததுவது உலகின ஒவ்வொரு மூலையிலும ஒவவொரு முஸலிமும இந் நினைவு நாளைக் கொண்டாடுகினறனர். சகோதர உணர்சசி வளர்ந்ததும் ஹிந்துககளும இதைத் தங்கள விழாவாகக் கொணடனா. அது எல்லா வகையிலும தகுநததே.

என் அகக்கணமுன தோன்றிய இரணடாவது சித்திரம ஸுபான தாத்தாவினுடையது, அவருடைய தோள்களின்மீது ஏறிககொணடுதான நான முகரம் காணச் செலவது வழக்கம்.

அந்த அகன்ற முகம, அந்த வெணமையான தாடி, அந்த நம்பிக்கை ததும்பும் கணகள, அந்தத் தேன் பிலிற்றும் உதடுகள், அவருடைய ஒளிவிடும் முகம! அவருடைய வாலிபப்பருவம், அலலா வேலே இவற்றுக குச் சரிபாதியாகப் பகுககப்பட்டிருநதது. அவருடைய முதுமை, அல்லாவின் நினைவால் நிரமபியிருநதது. அவரு டைய மனத்தில உயாநத எணணங்கள நிரமபியிருந்தன. அவரது இதயத்தில் தம்மையும் பிறரையும் ஒரேமாதிரி யாகக் குளிர்விக்கும் பிரேமதாரை—அன்புநதி-பெருகிக கொண டிருந்தது.

என் தலே வணங்குகிறது-கர்பலாவின் தியாகியின முன்னே அன்புடன வணங்குகிறேன-என அன்புள்ள ஸுபான் தாத்தாவை நமஸ்கரிக்கிறேன்.

## புதியா

ஒரு சிறிய ஆட்டுககுட்டி குதித்து ஓடிவந்து மல்லிகைக் கொடியின புதிய இளந்தளிர்களை விடாது கடித்துத் தினனத தொடஙகியது அச்சிறிய அழகிய பிராணி குதிப்பதையும தன நீணட காதுகளைப படபடவெனறு அடிததுக்கொணடே இலைகளை மெலலுவதையும், நாறபுறமும கவனிககுங் கணகளால் இஙகும் அஙகும பார்ததுககொணடே இடைவிடாது வாயாற கடிப்பதையும், அவ்வபபொழுது தாயின நினைவில 'அமமே' எனறு கததுவதையும நான வியப்புடன பாாததுககொணடே இருநதேன. அனறுவரை எனனிடததில அககலையுணர்வு தலைதூககியதிலலை ஆனால அனறு அமமலலிகைக் கொடியின மீது மிகுந்த சொநதம பாராடடினேன். வெகு தொலைவிலிருந்த ஓா ஊரிலிருநது பதியம கொண்டுவந்து என கையாலேயே நடடு நீரூறறி வந்தேன அது ஒவ்வொரு தளிா விடுமபோதும் என மகிழ்ச்சி கட்டுககு அடஙகாது. அத்தகைய கொடியை இசசிறு ஆடடுககுட்டி முறறும் நாசம செய்துவிடடதே' சினத்தினால அதை அடிகக ஓடினேன. அது மானகுட்டிபோலக் குதித்து ஓடிவிடடது. நான பினதொடாநதேன

''அடிககாதீாகளையா!'' எனறாள ஒரு பெண. அவள்தான புதியா. புதியா சிறுமி ஏழெட்டு வயதிறகு மேல இராது. இடுப்பில நிறம் மங்கிய புடைவைத் துண்டததைச் சுறறியிருந்தாள். அது எத்தனையோ ஒட்டுக்கள் போட்டுத் தைத்திருந்தது. அதுவும அவள் முழங்காலுக்குக் கீழே வரவிலலை. உடலில் வேறு ஆடை ஏதும் இல்லை. உடம்பு அழுக்கு நிரம்பித் தூசு படிந்திருந்தது. மாநிறமுளள முகததில குழறகற்றைகள் விரிந்து படிந்து கிடந்தன. அவற்றில் புழுதி படிந்திருந்தது.

சரும் பேனும் நிச்சயமாக இருக்கும். ஒரு மூக்கிலிருந்து மஞ்சள் நிறமுள்ள சளி ஒழுகிக்கொண் டிருந்தது. அடிக் கடி அதை உறிஞ்சியிழுக்க அவள முயன்றுகொண டிருந் தாள். அவளின் பேச்சைக் கேட்டு, அவள உருவத்தைப் பார்த்த பின்னும் அவள் கனனத்தில் ஓா அறை வைக்க வேணடுமென்று தோன்றியது. ஆனல் அவளுடைய காலின அருகே என் பாாவை சென்று பதிந்ததும அநத இடத்தே என் சிநதை செனறது. என சிறு பிள்ளை மனம் அங்கே பதிநதது.

''அட, நீ என்ன செய்து வைத்திருககிருய்?'' என்று நான் அருகே செனறு பாாககலானேன. அருகே இருக் கும் குட்டையிலிருநது களிமணணை கொணடுவநது அவள் வகை வகையான விளையாட்டுப் பொம்மைகளைச் செயதுகொண டிருநதாள். வயலிலிருநது கடுகு, கடலை முதலிய செடிகளின மலாகளைக கொணடுவநது அப் பொமமைகளை நன்கு அலஙகரித்து வைத்திருநதாள, பொம்மைகளுக்குத் தனிப்பட்ட உருவம் ஏதும இல்லை, ஆம், மனிதரைப் போன்ற உருவங்கள், பல வண்ண மலா களால் அழகுபடுத்தி யிருப்பதால் நனருகவே காணப பட்டன. நானை, ''இது என்ன?'' எனறு கேட்டேன. அவள் சிறிது வெட்கப்பட்டாள்.

''நீஙகள அடிக்காமல இருநதால் சொலலுகிறேன'' என்ருள்.

நிச்சயமாக அடித்திருப்பேன், ஆனல மனனித்து விட்டேன். அவள் சிரித்தாள் கீழே உட்காாநதாள. ''நீங்கள் உட்கார மாட்டீாகளா?'' என்ருள். அந்தச் சேற்றில் நான் எப்படி உட்காருவேன? நினறபடியே தலையை வளைத்துப் பார்த்தேன். அவள் சொல்லத் தொடங்கினள்:

''இது மாப்பிள்ளை; தலையின்மீது இருப்பது கிரீடம்''. கடுகுப் பூவைக் காட்டி, ''வஸந்த காலக் கிரீடம்'' என்ருள். "இது நாட்டுப் பெண். கடலைப் பூவை அணிந்துகொண்டு எவ்வளவு அழகாகக் காணப்

படுகிறுள், பாருங்கள்! இவர்களுக்குக் கல்யாணம் நடக்கும். கொட்டு மேளங்கூட உண்டு" என்று சொல்லி இரண்டு மூன்று முறை வயிற்றின்மீது தட்டிக்கொண்டாள். பிறகு வாயிஞல் சீழக்கை யடித்தாள். இவையே டோலக்,* ஷஞய் எல்லாம். ''இது பூஜையறை''—மண்ணுல நாற்புறமும எல்லேகட்டி யமைத்திருந்தாள. ''இது மலர்ப் படுக்கை"—பசுமையான மாவிலேமீது சில மலர்கள் தூவப்பட்டிருநதன. ''இப் படுக்கையின்மேல் இருவரும் உறங்குவர். நான் பாட்டுப் பாடுவேன.''

அவள் ஏதேதோ முணு முணுக்கத் தொடங்கிஞள். பாடிஞள, ஆடிஞள. சிறிது நேரம் அதிலேயே ஆழந்து பார்த்தேன, கேடடேன. பிறகு என் கவனம என் மல்லிகைக் கொடிமீது சென்றது. ஓடினேன் ஒவவோர் இலேயையும எணணிப் பாாத்து வருந்தினேன். ஆட்டுக் குட்டியை உயிரோடு மென்று தினறுவிடுவதாகச் சபதஞ் செயதேன். புதியாவைத திட்டினேன்.....

* * *

''எஜமான், சறறு இப் புல்லுககட்டை ஒருகை நூக்கி விடுங்களேன'' எனற ஒரு குரல கேடடது.

தலேயைக் குனிந்துகொணடே ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றி மனததுககுளளேயே விஞ விடைகள் சொலலிககொணடு, ஊரிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் அப்பாதையில் மாலே நேரத்தில் காற்று வாங்கிக் கொண்டிருந்த நான் இக்குரலேக் கேட்டதும் தலே நிமிர்நது பார்த்தேன.

கையெழுத்து மறையும் நேரம் அது. பாதையின் ஓரத்தில் வயலில் ஒரு மங்கை நின்றுகொணடிருப்பது தெரிநதது. புல்லுககட்டு அவள காலடியில் கிடந்தது.

நான் சினங் கொண்டேன். அவளுடைய துணிச்சலேக் கண்டு கோபித்தேன். நான் இப்பொழுது பட்ட

* வட இந்தியாவில் மிகுதியும் வாசிக்கப்பெறும் நமது நாகஸ்வரம் போன்ற ஒரு வாததியம்.

ணத்து மனிதன். நல்ல ஆடைகள் அணிகிறேன். கிராமத்து மக்களின் குப்பை கூளங்களிலிருநது விலகி யிருக்க முயலுகிறேன். நான் என்ன புல்லுக்கட்டு, வைக்கோல்கட்டுச் சுமப்பவனு, அந்தப் புல்லுக்கட்டைத் தூக்குவதற்கு' கிராமத்தில என்னிடம இவவாறு கூறு வதறகு எவருககுத் தைரியம் உணடு? ஆனுல பாருஙகள இவளை ...

''தூக்கிவிட மாட்டீாகளா?''

நான் அவள முகத்தை உறுததுப் பார்த்தேன. உருவததிலும குரலிலும உணடான வேறுபாடு என்னை ஏமாற்றிவிட்டது அட, இவள் புதியா அலலவா? இப் போது மங்கைப் பருவம எயதி வி. டாள இத்தனை விரைவில இந்தப் பருவ மாறுதலா?

அக்கம பககததில பாாததேன; எவரும இலலை. இரவு நெருஙகிககொண டிருநதது பாவம' அவளுக்குப் புல்லுககட்டை யாா் தூககி விடுவா? மனம இரங்கி நான புல்லுக்கட்டைத தூககிவிடடேன அவள அதைச் சுமந்துகொண்டு மகிழசசியுடன சென்றுவிடடாள.

அந்தச் சமயததில ஒரு பெருஞ சிரிபபொலி கேட டது. சிறிது நேரததில ஜகதீசன என்னருகே வநதான. ''கடைசியில் உஙகளையும இவள தன வலையில வீழததி விட்டாளா?'' என்ருன். ஜகதீசனின கண்களில் போக் கிரித்தனம இருந்தது குரலில கேலி தெரிநதது. பிறகு அவன் புதியாவின புராணத்தைப் படிககத் தொடஙகி விட்டான்.

இப்பொழுது புதியா ஒட்டுப போட்ட துணி கட்டிய புதியா அலலள. அவள் பாவாடையின நிறம இப் பொழுது மஙகுவதே இலலை. அவளுடைய ரவிககை யைக கைதேர்நத தையல்காரன தைககிருன. அவள் நாள்தோறும் புல்லறுகக வரத்தான் வருகிருள. ஆனுல அவள் கை தொட்டுத தள்ளுவது கிடக்கட்டும; அறை யைக் கூடப் பெறமுடியாது. நிறம் அதே மாநிறந தான். அதில் சாக்கடையின் நாற்றம் எடுத்த நீரின்

தேக்கம இல்லை; யமுனையின் கலகலப்பும் சலசலப்பும் உள்ளன. அதன் கரைமீது எத்தனையோ கோபாலர்கள், இடையாகள குழலூதுகினறனா எத்தனையோ நநத குமாராகள் கிருஷ்ணாகள் - 'ராஸலீலை' பெறக கனவு காணகினறனா புதியா எந்தப் புறந திருமபினுலும் அஙகே வாழவின அலைகள எழும. அவள கூநதலில் மல்லிகை மணம வீசும. அவளுடைய வேண்டுகோளில காதற பாாவை பளபளககும. அநநாள பிருந்தாவனத் தில கணணன ஒருவன, கோபிகைகள் ஆயிரவர் இருந் தனர். இங்கு ஒரு கோபி, ஆயிரம கோபாலாகள உள் ளனா. இநதக கோபாலாகள் அனைவரையும ஒரே கயிற் றில கட்டி ஆடடுவிப்பதில புதியாவுககு உண்டாகும மகிழசசி, அநத ஆயிரந் தலைகளுள்ள காளியனை ஆட்டு விதது, அவன முடிகளின் மீதேறி நடம புரிகையில அக் கணணனுககுக் கூட உணடாகியிராது! ராதை இந்த யுகத்தில புதியாவின் உருவததில் வந்து ஆணகளிடம் தன துவாபரயுகத்துககுப பழியைத் தீாததுக்கொள்ளு கிருள. அவா் துடிததுக்கொண டிருநதாள்; இவள் மறறவாகளைத துடிககச் செய்கிருள்.

அநதோ, குடி கெட்டுவிட்டது! நன்னடத்தை யில் ஊறிய என இதயம தவிததது நான தலைகுனி வுடன் அவவிருளில வீட்டுககுத திரும்பினேன. ஜகதீசன் வேறு வழியாகச் சென்றுவிட்டான. சிறிது தொலைவு சென்றதும் கிராமத்தின சமீபத்தில என்மேல் யாரோ என உடலில் உராய்ந்துகொண்டு போவது போலத் தோன்றியது. என் தலை தானே பின்புறந் திரும்பியது.

''மன்னியுங்கள், இரண்டாவது தடவை குற்றம் நேர்நதுவிட்டது'' என்று திடுககிட்டு நினறவளாய் அவள கூறினுள. அவள புதியா. ''துஷ்டை, நடத்தை கெட்டவள'' என்று நான் எரிநது வீழ்நதேன். இதைக் கேட்டு வெட்கப்படுவதற்குப் பதிலாக அவள் பெருஞ் சத்தமிட்டு நகைத்தாள். சிறிதும் அச்சமின்றி அருகே நெருங்கிக் கூறினுள்:

''ஐயா நினைவிருக்கிறதா, எனது ஆடடுக்குட்டி மல்லிகையை மேய்ந்ததே?''

இருளில் அவள முப்பததிரண்டு பற்களும் ஒளிர்ந் தன.

''துஷ்டை, ஓடிப்போ!''

நிச்சயமாக அப்பொழுது என முகம் சிவந்த நெருப புத் தணலாக இருந்திருக்கும். அந்த மாப்பிளளை, அநத மணப்பெண, அந்தப் பூஜையறை, அநத மலர்ப் படுக்கை, அதே பாட்டு இவை என் நினைவுககு வநதன ''பாட்டுக் கேட்கிறீாகளா ஐயா?''

''அலங்காரம செய்துகொணடு கணவன வீடு செல்வாய. அஙகே போனபின அசசங்கொளளாதே'' என்று அவள் பாமக்கொணடும நகைததுககொணடும காதற் பார்வையை வீசிக்கொணடும் ஓடிச் சென்ருள. ஆ, என்ன வெட்கமினமை, கூச்சமின்மை! நான என்ன என்னவோ திடடினேன் தொலைவிலிருநது அவள நகைக்கும் ஒலி கேடடது.

* * *

கோதுமை அறுவடை யாகிகசொண டிருநதது. ''தம்பி, இன்று கூலியாட்கள அதிகம, திருடி விடுவாா கள். சற்று வயல் பககம் போகிருயா? அஙகே போய நீ சும்மா நினருல போதும் வேலை தானுகவே நடககும'' என்று என அண்ணு கூறிஞா.

என் குருதியில் எங்கோ எஞ்சியிருந்த பயிாத தொழில் புதிய வேலையில் புது அநுபவத்தைப் பெறும் ஆவலுடன் கலந்து என்னை வயலில் கொண்டுபோய் நிறுத்தியது.

பழுத்து முதிர்ந்த கோதுமைக் கதிர்கள் மேலும் முதிர்ந்து கெட்டுவிட லாகாது எனபதறகாக நில வொளியிலே நடந்த அறுவடை பின்னிரவிலேயே முடிந்துவிட்டது. கட்டுகள் கட்டப்பட்டன கூலியாட கள் அவற்றைக் கட்டிக்கொண் டிருந்தனர் அவாக

ளுடைய மனைவிமார்களும் குழந்தைகளும் கீழே வீழ்ந் திருந்த கதிர்களைத் தமக்கெனப் பொறுக்கிச் சேர்த்துக் கொணடிருந்தனா. கீழே வீழ்ந்திருந்த கதிாகள் என்ற சாக்கில நல்ல கதிர்களையே எடுததுக்கொணடு விடப் போகிறாாகளே" என்று எண்ணியே என்னை அனுப்பி யிருந்தாாகள்.

நான் ஓரிடத்தில் நினறுகொண்டு கவனத்துடன என் வேலையைச் செய்துகொண டிருந்தேன ஆனால வயலின ஒரு மூலையில், எனக்குச் சிறிது தொலைவில ஒரு கூலியாளின் பினனால் நடுத்தர வயதுளள மாதும அவ ளுடைய பல குழந்தைகளும் கதிாகளைக கணடபடி கொய்துகொண டிருந்தனா. ஏதோ ஏமாறறுவேலை நடக்கிறது என்றே சொல்லலாம்.

''ஏய், யாரது பெண்ணே, என்ன செய்துகொண டிருக்கிறாய?''

என் உரதத குரல் காதில் வீழந்தும வீழாததுபோல இருநதாள அவள் ஆம, அவள கணவன அவளை மிரட்டு வதுபோல நினைததுவிட்டாளெனறு தோன்றுகிறது.

ஒருமுறை, இருமுறை, மும்முறை கேட்டேன் என்னை அவமதித்ததால சினம் மிககொணடு அப்பககஞ சென்றேன. நான் அந்தப் பக்கம் வருவதைக் கணடு அவளுடைய நானகு குழந்தைகளும் - அவாகளுக்கு ஆறு வயதிறகுளதான் இருக்கும - அவளருகே வநதனா. அவாகளுக்குள சிறிய குழந்தை - ஒன்றரை வயதுதான் இருக்கும் - அச்சத்துடன் அவள கால்களைக் கட்டிக கொண்டது. சிறிது தூரத்தில் இருந்தே நான் மிரட்டி னேன்.

''என்ன செய்துகொண் டிருக்கிறாய் நீ?''

கையினால் கதிாகளை அறுப்பதை நிறுத்தாமலே வளைந்து, முகததைத் திருப்பி என்னை அவள் பார்த்தாள். உடனே, ''சலாம் ஐயா'' என்றாள.

அடே, இவள யார்? புதியாவா? புடைவைத துண டைக கட்டிக்கொண டிருந்த அந்தப் புதியாவா இவள்?

ஆடை அழுக்கே ஆகாதிருந்ததே அதே புதியாவா இவள்! ஐயோ, இது என்ன? அவளுடைய குழந்தைப் பருவம், அவளுடைய மங்கைப் பருவம்? இந்த..ஆம் இது முதுமைதான். கிழிந்த ஆடை. ரவிக்கை என்ற பெயரே இல்லை. கூந்தல் கலைந்து கிடககிறது. முகம் காயநது சுருஙகியுளளது. கனனஙகளில பளளம; கணகள் உளளே போயிருநதன. மேலும், தமது உருடசி, திரட்சி, எழுசசிகளால வாலிபர்களைப் பைத்தியமாக அடித்துககொண டிருநத அவளுடைய மஙகைப் பருவத் தின் இரு முகைகள், அவள் குனிந்து கதிாகளை அரிநத போது ஆட்டின் மடிபோலத தொங்கி, உயிரின்றி, துடிப்பின்றி ஆடிககொண டிருந்தன.

''புதியாவா?''

''ஆம் ஐயா!''

முகததைத திருப்பி, வறணட புன்சிரிப்புடன என்னைப் பார்த்துவிட்டுத் தன் வேலையைத் தொடர்ந்தாள்.

அதறகுள அவளுடைய கணவன கட்டுக கடடி முடித்திருநதான். ''சறறு இஙகே வநது இதைத தூககி விடு'' என்று கூறி அவளை அழைததான.

புதியா அறுப்பதை நிறுத்திவிட்டு, நிமிர்நது நின் முள். எனனை ஒருமுறை நோக்கிவிட்டு, ஒரு புன்முறுவல் செய்து அப்பககமாக நடநதாள.

நான அவள நிமிர்ந்து நிற்கையிலே பார்த் தேன். அவள் வயிறு பருத்திருந்தது. கால்கள் எழும்ப வில்லை. ஓ-இவள் கர்ப்பிணி! ''நீ நில். நான் சுமையைத் தூக்கி விடுகிறேன'' எனறேன்.

''வேணடாம், ஐயா. தஙகளைத் தூக்கிவிடச சொல்ல மாட்டேன நீஙகள கோபிததுககொள்ளுவீாகள.

அவளுடைய முனபறகள இரணடும் ஒரு தனிப்பட்ட பரிதாபக காடசியைப பொழிநதுகொணடு ஒளிாநதன.

நான திடுக்கிட்டேன. பழைய நிகழ்ச்சி நினை வுககு வந்தது. அந்த மாலை, அநதப் புல்லுக்கட்டு, புதியாவின வேணடுகோள், ஜகதீசனின் கேலி, எனது

மனமயக்கம் இவை நினைவுக்கு வந்தன. அச்சமயத்தில் அவள் சிறு குழந்தை அழுதது. அவள் அதனருகே ஓடினாள். நான் நேராக அவளுடைய கணவனருகே சென்றேன். "சுமையைத் தூக்கிவிட்டேன்!" அவன் நல்ல கட்டுவாய்ந்த வாலிபன். சுமையைத தூக்கிக்கொண்டு உற்சாகமாகச் சென்றான். இங்கே குழநதையின் வாயில் தன் வறண்ட மார்பைப் புகுததிச் சீராட்டிப் பாராட்டிக் கொஞ்சிக்கொணடே புதியா, "ஐயா தங்களுக்கு எததனை குழநதைகள்? இநதக குழந்தைகள் மிகவும் போககிரிகள ஐயா! என் உடலை நாசஞ் செய்தும் இவா களுககுத் திருபதியிலலை. இவர்கள் தொந்தரவு செய்தே எனனைக் கொனறுவிடுகிறார்கள்" எனறாள.

மற்ற மூன்று குழநதைகளும் அவளை அணைத்தாற் போல நினறனா. ஒன்றின் உடலைத் தடவினாள, இன்னொறின முதுகில தட்டினாள; மறறொன்றினமீது கணக ளாலேயே அன்பைப் பொழிநதாள். கைககுழந்தையைத் தட்டிக்கொடுத்துச சீராடடினாள.

இந்நிலையில் அவள என்னிடம் என்ன என்னவோ உளறிக்கொண டிருந்தாள. நான் அவளையே பார்த் தேன்; கண்கள அவளைப் பார்த்துக்கொண் டிருந்தன, மூளை தன வேலையைச செய்துகொண டிருந்தது.

மழைக்காலம கழிந்துவிட்டது. வெள்ளப்பெருக்கு நின்றுவிட்டது. இப்பொழுது ஆறு தன் நிலையில் உள் ளது. நிதானமாகப் பெருககிறது. வெள்ளம் இல்லை; ஹோ என்ற சத்தமிலலை சேறு, கரையை இடித்தல் என்ற அடையாளமே இலலை. அமைதியான, அன்பு கொண்ட கங்கை.

என் எதிரே உயர்ந்த தாய்மை உள்ளது; அது வணங்கததக்கது, வழிபாட்டிற்கு உரியது!

**முற்றும்**

